என்பனபலவுமொழிந்திடக்கேட்டாங் கெழின்மிகுஞ்சுந்தரமூர்த்தி, யின்புறவணங்கியறத்துறுபலனை யிசைத்திடக்கேட்டகமகிழ்ந்தன் றன்பினைவிளக்கும் பாவமுறும்பதகர் தொடர்கதியையுஞ் சொலுமெனவே, யன்புமீதூறச்சுந்தரானந்த ரெனுமருந்தவத்தினரருளவார். ௧௬

புண்ணியபலப்படலமுற்றிற்று.

——*——

ஆக படலம்-௯க்கு திருவிருத்தம் - ௪௯௰.



# பாவபலப்படலம்.

சுந்தரநீகே ளந்தரவுலகந் துமரிநாளுஞ்
சிந்தைகளிப்பால் வாழ்நாகரு நற்செயலசொற்று
மிந்தநிலத்தோ ரிழிதொழிற்பாவ ரினைசெய்தே
நிந்தையுறுமவெந் நிரயமதுறுவன நெறிசொல்வாம். ௧

சூத்தன்சங்கீதன் விகடனுயிர் கொலைசெய்வோ
னேத்துறுவிரதம விட்டோனபெண்களை மிகவீன்றோன்
றீந்தொழில்புரியு மறையவர்பொருடிரு டுங்கோளன்
சேர்த்துறுபொருளின் வட்டியினுஞ்சீ விப்போனும். ௨

தன்குருவின்பா லச்சமிலாது சடஞ்சொல்வோன்
பின்பொருவன்றன் மனைவிபொன்னிச்சை பெரிதுள்ளோ
னன்றிமறந்தோ னுலகாயுதனொடு நாத்திக
னென்றிவரெல்லா நிரயமதுற்றிட ரடைவாரே. ௩

மித்திரபேதன் குலநியமங்கை விட்டோனுஞ்
சுத்தமுறுமமறை விற்போன்கீழவர் தொழில்செய்வோன்
புத்தியிலாதவ னட்புறுவோன்புக ழறம்விற்போன்
பத்தியிலாக்கொடு நீசர்பெறப்பசுபால்விற்போன். ௪

பொறுமையிலார்க்குத் தவர்களிழைத்தவ போக்கில்லார்
சிறுவர்கடங்கட் கனமளியாமற் றீதாகு
மறுசுவையுண்டிக டாமுணபவராழ் நிரயத்தி
னுறுவர்களென்றன் மறையறிவோர்க ளுரைப்பாரால். ௫

ஊருந்தேர்ப்பா கன்மிகுகட்டிய முறைசெய்வோ
னீருமருத்தன் கணிகைகூதாடி யிருவோரைச்

சேருமனத்தா ளவள்கணவன்மூத் தவன்செய்யா
தாருமனத்தா னரசர்தம்மனையி னனங்கொள்வான். ௬

தந்தையுடன்று யுண்ணவுணுதுறு சண்டாள
னிந்தையுடன்கள் ளொடுமதுநுகரு நெறியில்லான்
புந்தியினஞ்சுத லின்றித்திருடும் பொறையில்லான்
பந்தமுறுங்கொடு நிரையமதிற்போய்ப் படாவாரே ௭

இன்மையி னூனை யுண்ணவழைத் திங்கிலை யென்றோ
நன்மைகொள் வேதியர் தொழிலைம றுத் தவர் நகர்வீடு
தொன்முனி வோருறை யாச்சிர மங்கள் சுடுவிப்போர்
மென்பசு வுணவீ ரளியாருங் கொடு நரகிடை மேவுவரே. ௮

நெறியுறு வேதியா தமைநீங் திப்பவா நடையில்லா
ரறிவி லரந்தக ரின்பொருள் கவர்பவ ரளியாக
முறையறி வித்தருள் குருமொழி கொள்ளா மினுயபாற்
குறிகொளை நாண்முற் கூடுவா கொலலாக கொலையோரே. ௯

கோமலாரு மூன்றுஞ் செஞ்சடை சூடுமியு மிலரேனு
மேலுள காவித் துகிலுமிலா வரைவிருப பாடரா
சீலநற் றுறவாஞ் சிந்தையா நிவவே டத் தோரைப்
பாலரையாத ரியாதவா நரகிற் பாய்வாரே க0

வேறு.

பூதலந் தனக்குங் காலன் புரிகருமெண் பாறு றென்ன
வோதுமா யிரங்க ளூற்ற யோசனை யகலவி னுள்ளாய்
மீதுறு மரங்க ளீழ விலைல ரய் வெருவல் காட்டும்
பூதமு மிரண்டிட் கல்லும் பொருந்திய நெறிய தாமால். கக

உள்ள முன்வினை வயத்தா லுடலுறு முயிரைத் தூதர்
தள்ளுறத் தூல நீங்கிச சூக்கும தனுவி னோடும்
விள்ளரு மெரியி னூலும் வெகிடா விளைப்ப யாவுங்
கொள்ளுறும் வலிமை யுற்ற குடம்பையைப் பிணித்தல்செய்தே.

கோரமாய்க் காலதூதர் கூட்டும் வெம் பாசத் துள்ள
யாரு மாதார மின்றி யிருவினை யகலா தாகிச்
சேரும்பல் லுறவும் விட்டுச செய்வினை கினைந்து நைந்தாங்
கீரமில் பத்தர் செல்லு நெறியிருட் டுயர்நீங் காதால். கஈ

வரையறை காலம் வந்தான் மாத்திரை தருக வொட்டா
ருரைசெய் நால்வகையின் றோற்றத துற்றுவா ழுயிர்க ளோடு
நரர்மிகு மசுர ராதி யாவர்க்கு நமனூர் தப்பா
தொருவறு முதுமை மட்டு முறுபொழு தினதென் றின்றால். க௪

இடமிது கால மீது செய்கையீ தென்ப தின்றிக்
கடைவரி னஞ்சு மாறு கட்டுவ ரடிப்பர் சுற்ற
மிடைவிழுந் தலற வெய்ய முள்ளாற் றிற் கதையா லெற்றிக்
கொடுமணற் கொதிப்பிற் றள்ளிப் பாதகக் கொடுபோ வாரே.

கொலைபுரி கொடியோர் தம்மைக் கோரமா யுலக்கையாலே
தலைமுத லுடல முற்றுந் தசையுட னிரத் தங் கால
நிலையறக் கைகான் முக்கு நெற்றிவாய நெறியத் தோள்க
ளலைவுறக் கவுணியார் பெண்பு மொடிந்துக வை நடிப்பர். க௬

அளவருங் கருவி தம்மா லறுத்துக் குத்தியு மடிந்து
முளமது பதைப்பச சுட்டுக் கொண்டுபோய நரகுட் டள்ளக்
களமுறத் தேளும் பாமபு கழுகிடை வட்டை காகந்
தளர்வுறத் தின்னுந் தாமுண் விலங்கெலாந் தம்மைத் தின்னும்.

சிறியரைக் கொன்றுளார்கள் சேயிழை யவரைக் கொன்றோ
ரறிவுற நமனேனேர்த நட்டையா தரிந்திடா தோர்
வெறிமலர்க் குழலி னாக்கு விருமபிக்குற் றேவல் செய்வோர்
தறிசெயுங் கருவி தமமாற் றண்டிக்கப் படுவதாமால். க௮

இல்லுறு பொருளை வெய்ய விருளிடைக் கவர்வுற் றோரை
வல்லுரத் திடித்து மோதி வயங்குகொள் ளியினாற் காயவர்
நல்லவர்க் கிடரிழைத்து மிகழ்ந்து நோவசசொன் னவைப்
பல்லினை விகலன் காகம் பறிக்கப்போய் நரகிற் பாய்வர். க௯

உள்ளவ ராக வாழ்ந்து முயர்ந்தவர்க் குதவா தோரை
யொள்ளிய கழுத்திற் பாச முறவடித் துடற்றி மென்மேல்
கொள்ளரும் பரியாற் றுன்பங் கொண்டுநீ ரன்னங் கேட்பத்
தள்ளிப் போய்க் கும்பிபாக நரகத்துச் சார்விப்பாரால். ௨0

கொடிய பாதகர்க டம்மைக் கூறுகூ றாக வாட்கொண்
டடிமுதன் முடியின் காறு மரிந்துவெந் தழலி லிட்டு
மிடியென வதிர்த்துக் காயு மிருப்புத்தா ணேடுகட்டி
நெடியவரிங் கிருமி யாவு நெருங்கிய குழியிற் சேர்ப்பர். ௨க

இவ்வகை யநந்த கோடி நிரையத்து ளேங்கி யேங்கிச்
செய்வகை யுணரா ராகித் திகைத்துநொந் தழுது துன்பப்
பௌவமுற் றுணங்கும் வெய்ய பாதகர் பதைக்குந் தோறு
முய்வகை செய்திலோமே யெனவுளைந் திவைசொல்வாரால். ௨௨

வேறு.

பெண்டிர் தனயர்சுற்றமுற்றோர் பின்னேயுதவி செய்வரெனக்
கொண்டு தருமங்கைவிட்டிக் கொடியநரகுக் காளானோ
முண்டா ருடுத்தார்மற்றுமுற்று முற்றாருற்ற வேளையில்வந்
தண்டார் புரிந்ததைம்பாவ மதுவேயுயிர்க்கா தரவென்பர். ௨௩

தேடியபொருளையறநாளுஞ் செயாதுசிறிய தொழில்களித்துப்
பாடிவிழலுக்கிறைத்ததுபோற் பவமேபுரிந்த நாமுழுபிணை
நாடியினும்போய்ப்பூவுலகி லெண்ணுறுமிக விழுநரகினுறுங்
கேடிப்படிக்குவிளைக்குமென் றிட்டோமென்று சிலர்சொல்வார். ௨௪

எந்தநாளுமிறவாம லிருப்பதாக மனத்தினினைந்
தந்தோகொடிய பவம்வாரமடுத்தே நாந்தமர்க்குறிப்ப செய்தோ
முந்தவிதனையுணரிற்பொருண முழுதும்வறிஞர்பெறவுதவிச்
சிந்தைகளிக்கத்தேவர்பதஞ் சேர்வோமென்று சிலர்சொல்வார். ௨௫

ஐயமுனரிற்பூவுலகி லறியாமையினுற்பவம்விளைத்த
வெய்யவெமைப்போய்ப் பறந்தமரத்தின் மேவவருளிவிட்டதோற்
பொய்யின்மேனாட்டேடிமனை புதைத்து வைத்தவியாருனைத்துஞ்
செய்யவறங்களாற்றியிவண் சேர்வோமென்று சிலர்சொல்வார். ௨௬

பிறந்தபிறவியீடேறப் பிரமமுணர்ந்து மமதைத்தனைத்
துறந்திங்கர்க்கெய்தாதநெறி யென்றுதோன்றுமென்பர்சில
ரிறந்திந்நிரையத் தழுந்துவதா யிழைத்தோம்பவத்தையெழிலறத்தை
மறந்தோமந்தோவித்துயர மாறுமோவென் றழுவர்சிலர். ௨௭

நரகஞ்சுவர்க்கமென்பதனை நாடிப்பார்த்துமண்மீதி
லுணாசெய்தவராரென்றுநம துணர்வைக் கெடுத்துச்சார்வாகன்
வனையும்விதத்தானமைநரகின் வருந்தப்புரிந்தமிகுகொடிய
பரமபதகரிந்நரகிற் படர்வரெனவே நகர்வர்சிலர். ௨௮

இன்னும்பலவாறுகநர கெய்தியுழலுமாந்தர்செயல்
பன்னவரிதாமாதலினாற் பவமோர்பொழுதும்பண்ணுமற்
றண்ணுருயிர்போலெவ்வுயிருந் தாமென்றகத்திலன்புறவே
யெந்நாளினுநல்லறங்கள்புரிந் தெய்துவார்நற்கதியினுளார். ௨௯

சொன்னதருமம்பலவவற்றுட் டுலங்கோதனமேயதிகமென
முன்னாருனாத்தமுறையாக முந்நீராடையுலகினிடை
மன்னுதருமமிவையந்தமட்டும் வழங்குமவரோகதிக்காவ
ரென்னவுயர்சுந்தரமூர்த்திக் கிசைத்தார்யாவுமுணர்ந்தோரே. கூ0

வேறு.

அன்பொடு சுந்தரானந்தா கூறலு
மின்புடனவரிரு பதங்களேத்தியிவ்
வன்கலியுகசசெயல் வழுத்துவீரெனத்
துன்பகன்முனிவரர் சொல்லுவாரரோ. கூக

பாவபலப்படல முற்றிற்று.

ஆ படலம் ய-கரு-திருவிருத்தம் - சகூஉ.

# கலியுகவியற்படலம்.

நலமிகுசுந்தர மூர்த்தி நன்குறுங்
கலியுகச்செயலினைக் கனிந்து கேட்டியே
லுலைவறுமுன்னைய யுகத்திறுபோ
லைவிதனபெருமையை யறைதுங்கேட்டியால். க

முன்னுறநிகழ்ந்தன யுகங்களமூன்றினுந்
துன்னினர்கலர் சிலர் சுருதிநன்முறை
மன்னியவறஞ்சில மருவிற்றெனினும்
பின்னுறுமிதிற்கலர் பெருக்கமிக்கதே. உ

வேதியர்தந்தொழில் விரும்பிமற்றுள
சாதியர்புரிவாக டாழ்ந்துளார்களை
யூதியம்பெறுவதற் குனியுயர்ந்தவர்
கோதுறவணங்குவர் குலமுனோர்களே. கூ

குறையுறுமீசரிக் குவலயத்திடை
மறையவருணரசசோ திடம்வகுப்பரா
னெறியுறுமரபினல்லொழுக்கநீங்கிட
முறையுறுந் தொழில்சிலர் முயலுவாரரோ. ச

தன்மனைதனம்விற்றுத் தனங்கடேடினு
நன்மைதானெனச்சிலர் நயந்துவாழ்வராற்
றன்மமென்பதனருட் டன்மையேதோர்வுறாக்
கன்மனத்தவர்சிலருறுவர்காசினியே. ரு

அடுக்கியகோடி பொன்பெறினுமானநற்
குடிக்கியலாதன குறைக்குடன்படார்
படிக்குணமேலவரெனப் பகர்தன்மையாறுற
மிடிக்குடன்படுவர்மீ ப்பரியுமேற்பரால். சு

குன்றினையனையபொன் கொண்டோர்களுங்
குன்றுவக்குன்றிபி னாளைசெய்பினுங்
குன்றுவமெனமுனோர் கூறுமாற்றினி
நன்றிலாரெனச்சிலர் நயப்பர்பாரினே எ

தலையிடையிழிதரு மயிரினைநிகர்மாபா
நிலையிடைத்திரிவுறு நெறியினோரெனப்
புலமையினோருமாம புகலுந்தன்மையிற்
குலநலமறிவுறார் சிலர்கள்கூறிலோ. அ

ஈட்டியபொருளைநல் லறத்துய்த்திலர்
வாட்டமிலறிஞர்க ளமிழ்நல்கிலர்
கோட்டங்கொண்மனத்தராய்க் கொடிதுடைப்பவர்
கேட்டனகொடுப்பராப் பிறந்துமின்றியே. கூ

தானுமுண்ணார்சுற்றத் தவர்க்குந்தார்தரா
ருனுடையுடம்பினை வருத்தியொண்பொரு
ளீனையபுதைத்தவர்க் கொடைசெய்வார்கட்குத்
தேனுறுமளியினிற் றருவராற்சிலர் கய

சிறப்பினைத்தருவதுஞ் செல்வத்துய்ப்பது
மறத்தினல்லாற்றினை யன்றியின்றென
மறத்தினையகற்றுநூல் வருத்தன்னெறி
மறுத்துவெம்பவத்தினை வளர்ப்பராற்சிலர். கக

என்பிலாப்புழுக்களைக் கதிரெரிப்பபோ
லன்பிலாவுயிர்களை யறஞ்சுடும்மென
முன்புரைதேர்கிலா மூடராய்ச்சிலர்
வன்கொடுஞ்செயலுடன் வாழ்வர்மண்ணினே. கஉ

புன்னுனியுறுபனி நீரைப்போலவு
மின்னிடையொளியென விளங்குமிவவுட
றன்னிடையுயிரதன் றன்மைநேர்கிலா
திங்கிலத்திறில தெனக்கொள்வார்சிலர். கஙு

ஒருபொழு தாயினும் வாழ்வ தோர்கிலர்
கருதுபலகோடிமேற் கணக்கிலாதன
மருவருமுலகியல் வழக்கமாதலைப்
பரிவொடுமேற்கொளார் பயனுணர்ச்சிலர். கச

வேறு.

தனையரேவிய தொழில்களைத் தந்தையர் புரிவர்
மனையின்வந்ததுன் மருகிசொனமாமிகேட்பதுவா
யனையவில்லவன் மொழியினைக்கேட்ப ராடவர்கள்
புனைநலந்தவர் நட்டவர் குறைபுகன்றிடவே. கரு

நசையுரைத்திட நாவிலராயும் பிறர்பால்
வசையுரைப்பதற் குடம்பெல்லாம் வாயெனப்பிதற்றி
யிசையறத்தன குற்றங்காண்பதற் குக் கண்ணிலரா
யசைவின்மற்றவர் குற்றமாயிரங் கணுக் காண்பர். கசா

குற்றமாகிய மொழிகளேற் கோடிமேனுழையுங்
கற்றமே வர்சொலுமொழி காதிடைநுழையா
துற்றசெல்வமேநிலையென வுணர்வின்றிநிலைமை
யற்றதுலகுமழிவுறு தெனநினைந்தமர்வர். கஎ

ஏற்றவர்க்கொன்று மீந்திடார்பிறரிடந்தாம்போ
யேற்றற்கென்னினமூ தெப்பொருளாகினுமேற்ப
ராற்றுநல்வழிச் செலற்கிருகாலழி முடமா
மாற்றுந் தீவழிச் செலமெனின் மருத்தினும் விரைவர். கஅ

அடுத்துளோர்களைக் கெடுத்தவர் பொருள்கவர்பவரு
நடுத்திரிந்தவை தனிலொரு பானவில்பவரும்
வடுத்தவிர்ந்த மேலவர்களை வசைபுகல் பவருங்
கடுத்தசொல்லினர் கவர்மனத்தினர் சிலர்காணே. கசு

தேவராலயங்களை மறைசெப்பும் வேதியரைத்
தாவினன்மறை சுருதிநூல்களையிகழ் சளக்கர்
கோவைமேலவாங் குலத்தைநிந்தனைசெயுங் கொடியோர்
பாவமேயுரு வாகிய பதகர்கள் பலரால். உ0

பெற்றதாய்மனம் பேதுறவியற்றும் பேதையரும்
பெற்றசேயினை விரும்புறாப் பேயனையவருஞ்
சுற்றமுள்ளவர்தமை யென்றும்பகைகொடேர்த்தர்களும்
வெற்றிவேந்தர்பாற் பகைகொளும்வெறியரும்பலரால். ௨௧

மனையின்மற்றொருவன் வரமனமதற்கினையவோர்
பினையொருத்தன்வாழ் மனையிடைநுழையும்பேதையர்க
ணனைமலர்க்குழற் பொதுவியர் கலவியைநயப்போ
ரனையவர்க்குக் குற்றேவல்செய் யசடர்கள்பலரால். ௨௨

கல்விமேன்மையு நன்மையுந்தருமெனக் கருதார்
பல்விதங்களினகஞ்செல வதன்வழிபடாந்து
நல்விதஞ்செயு முணர்விலாமையிற் பகைகொண்ணத்
தொல்வியாகித்தம் பொருள்கெடத் துளங்குவர்சிலரே. ௨௩

செவியினுணருஞ் சொற்சுவை தேறுநட்கிலநாய்
நவிலும்வாயுண விமலின்சுவை நன்குணரசட
ரவிகிலாதிருந்திப்பய னிலையென்பதறியார்
புவியினிற்கொடுந்தொழில் புரிந்துய்குவர்சிலரே. ௨௪

அச்சமின்றியே மதுநுகர்வார்களு மறிஞ
ரெச்சமென்றிகழ் சூதினைந்நாடுகின்றவரும்
பச்சமின்றித்தந்தாதைபாற் பாகங்கொள்பவரு
நச்சராவெனப்பலர்கட்கு நலிவுப்பாரபலரே. ௨௫

வருணபேதமின் றெனவுழல்கின்ற மடையர்
கருணையின்றியே வறிஞரைக்கடிந்துசொல் கொடியர்
புரியுமவெங்கொலை யாளர்கள் பொய்க்கரியுரைப்போ
ரெரிகொளுங்கனன் மடிக்குறுமேழையர்சிலரே. ௨௬

திருடுசெய்பவர்பிறர்க்குத் தீங்கிழைப்பவர்பலரை
மருவும்பெண்களை மனையில்வைத்திருக்கின்ற மடையர்
மருவினற்குல மடந்தையர் கற்பினையழிக்கக்
கருதுமூடர்கள சிலர்களிக்காசினியமர்வர். ௨௭

இனையவாகிய வெண்ணறும்பாவிக ளுறினு
மனையறத்தொடு நன்னெறி வழுவிலாதவராய்
கனைகடற்புவி தனிலெங்குங்கலந்து நல்லறங்கள்
கனிவுறச்செயுங் கருணையோர் மிகுதியாங்காணின். ௨௮

துன்னுநற்றவஞ் செபஞ்செய்வோர் தொகுதியுமருளா
லன்னதானங்கண் முதலியவறஞ்செய்வோர் திரளுங்
கன்னலின்சுவை கைத்திடக்கனிவுறப் பகர்வோர்
மன்னுந்தேவர்க்கா லயங்களும்வகுப்பவர்பலரால். ௨௯

தேவராலயங்களைத்தினந் தெரிசிப்போர்பலரே
யாவலாயத்திருப் பணிகளாற்றுவிப்பவர்பலரே
தாயின்மாதவர் தமக்குபசரிப்பவர்பலரே
பாவமின்றிநல்லறத்தினைப் புரிப்பவர்பலரே. ௩௰

கண்ணுறங்குவ போலவந்துறுவ சாக்காடக்
கண்விழிப்பது பொருவுவ பிறப்பெனக்கற்றோர்
பண்புலப்படப் பகர்ந்த நான்மறைப் பயனுணர்ந்து
தண்புனற்படு முதலியவறஞ்சிலர் சமைப்பர் ௩௧

அகுதிதெய்வமென் றடித்துணைதொழுதனங் கொடுப்போர்
தொகுதியாகநற் சுற்றத்தோருருந்துணை தாயோர்
பகுதியின்றித்தன் னுயிரெனப்பல்லுயிர்காப்போர்
மிகுதியாகவிம்மேதினிதனில்விளங்குவரே. ௩௨

இனையபற்பல வறங்களுஞ் செறிபிருநிலத்திற்
புனையும்பற்பல வணியினுங் கற்பினைப்புதுக்கி
மனைநன்மாட்சியி னுடனிருபரையுங் காக்குந்
தனைநிகர்த்திடா மேன்மைகொண்டையலார் பலரே. ௩௩

இல்லதென்ன தம்மில்லவண்மாண்புட னிருக்கி
னில்லண்மாண்பினை யில்லளேலுள்ளதெனென்று
வல்லநாவலர் முன்னைநாள்வழுத்து மாறுணர்ந்து
நல்லறத்துட னில்லறத்தவர்பலர் நாடின். ௩௪

வேதவேதியர்முதலியவியனுலகமர்வோர்
சாதிமேன்மையுமொழுக்குமுந்தவறுதலிலராய்
நீதியாய்ப்பெரும்பாலுமற்றத்திடைசரிலர்கள்
கோதுறங்கேதுவெதுவெனிற்கூறுதுங்கேண்மோ. ௩௫

வேறு.

மன்பதைபுரக்குமெல்லுமிரவுநேர்வழங்கல்போலு
மின்பமுந்துன்பமியார்க்குஞ்சமமெனவிசைத்தலாலு
மன்புடன்கலியுகத்திலுண்மிகவமர்தலாலே
துன்புசெய்கலருமீறித்துவன்றினரென்பமாதோ. ௩௬

முந்தியயுகத்திற்பாரின்மொழிதருவருணமின்றாய்ச்
செந்தழல்மகங்களின்றாய்த்தேவராலயங்களின்றாய்
நந்தலாம்பவங்களின்றாயநவஞ்செறியறமுமின்றாய்
வந்துறுதீர்த்தமின்றாய்வழங்கியதென்பர்மேலோர். ௩௭

இரண்டதாம்யுகத்திற்குன்றுவருணத்திரியல்புண்டாகி
மருண்டதன்மையினைமாற்றுமறைமகன்னம்பிரங்களுண்டாய்த்
தெருண்டவர்மகங்களாதிசெய்வதற்கேதுவாகி
யருந்தவஞ்சிலர்களாற்றவிளங்கியதவனியென்பர். ௩௮

மூன்றதாம்யுகத்தின்மிக்கமுதுமறைகுருதிகேற்ப
வான்றதேவாலயங்களத்தர்களாலமைந்த
சான்றவர்சிலருந்தன்மாதன்மையுஞ்சாமமோகந்
தோன்றியதென்னநூறேர்மேலவர்சொல்லுவாரால் ௩௯

இந்தநற்கலியுகத்திலிருக்குகாவிரியைக்கின்
முந்துறும்வடகரைக்கோயின்மொழிதருமறுபான்மூன்று
முந்துதென்கரையிற்சேர்ந்ததோருநாற்றிருபதநேழு
மந்தமிழ்த்தலங்களுற்றுந்தொண்ணூறுந்தொகுயன்றே. ௪௰

பாண்டிநன்னாட்டிலீசன்பதிபதினாலுமாகும்
வேண்டியதுநவுஞ்சேரநாட்டிலமடவிளங்குமொன்றுங்
காண்டகுகொங்குநாட்டிற்கயிலைசேர்தலங்களேழுந்
தூண்டருவிளக்கமன்னநடுவநாடதனிலொராறும். ௪௧

தொண்டமண்டலத்திலந்தசமோதிசேர்தலமெண்ணான்கும்
தண்டலின்மகதநாட்டிற்றலமிருபத்திரண்டு
மண்டலம்புகழுகிளைறவடபுலத்தைந்துமீசன்
பண்டமர்தலமிரண்டுநாற்பெழுபாலலாயல். ௪௨

திருமலிமார்பன்மேவுந்திருத்தலஞ்சோழநாட்டின்
மருவுவடகரைப்பான்முன்றும்வகிர்பாண்டிதனின்மூவாறும்
பெருவளமலையநாட்டிற்பிறங்கியதலம்பன்மூன்றுந்
தருமலிதொண்டநாட்டிற்றலமிருபத்துநான்கும் ௪௩

வடபுலந்தன்னின்மேன்றுமவழங்கியதலமீராறுந்
தடமதிற்காளியன்றன்றலைதொறுநடனஞ்செய்து
படமுயரரவைநாளும்பாயலாய்ப்பள்ளிகொள்ளுந்
திடமிகுமரியுற்றோங்குந்திருப்பதிநூற்றுப்பத்தே. ௪௪

தொன்மரகீழலுற்றுத்துகாறுமீசனன்பான்
முன்னுபதேசம்பெற்றமூவரான்முனிவர்தம்மாற்
சொன்முறைபாடற்பெற்றநலங்களாய்சொல்வர்பின்னு
நன்மையேவிளைக்கும்பல்சேத்திரங்களுனிலத்தினுண்டால். சரு

ஈதலானதிகளிந்தவிருநிலவரைப்பினுப்பன்
மீதுயர்ந்தெழுந்தமேருகிரிமேல்பாற்சக்குவென்றாங்
கீதறுவடக்கிற்பத்திராநதிதிகற்கீட்டிக்கிற்
சீதையென்றுரைக்கவான்றசெழுநதிசெல்லுமன்றே. சசு

அன்னமால்வரையின்றென்பாற்பாவினியலேபண்மோதி
நன்னலமாகசசெல்லுமிலாதினிநவினிமூன்றுயச்
சொன்னவைகளுக்குத்தென்பாற்றுலப்புவபரதகண்டந்
தன்னிலேழ்நிவுமுண்டாலதன்பெயர்சாற்றக்கேண்மோ சஎ

நாவல்கண்மிகுதலானநலஞ்செறிசம்புத்தீவே
தாவிலா * விறலியுற்றதாந்தரும்பிலக்கத்தீவே
மேவுறுமிலவுமிக்குவிளங்குஞ்சான்மலியாந்தீவே
கோவுறுங்குசப்புற்சார்ந்துகுலவியகுசத்தீவாமால். சஅ

கிரிகண்மிக்குளதுசெய்யநிரவுஞ்சமென்னுந்தீவே
விரிதருமடைகொட்டிக்குவிருக்கஞ்சேர்சாகந்தீவே
வரிகொள்வணடினஞ்சூழ்சோலைவாவியுபுட்பகமாந்தீவே
தெரிதருமிவ்வேழ்தீவிற்செல்லுறுநதிகள்சொல்வாம். சகூ

தாம்பிரபருணிவைவைகவுண்டலிதப்கசிந்தி
யோம்புறற்சிருதமாலையுயர்வைகாயரிகாவேரி
யேம்பலில்பெண்ணைபாலாரினியசக்கரவரத்தை
தேம்படுதுங்கபத்திசிறப்புறுவேணியாறே. ருo

திருவீமாநதிநற்கோதாவிரிபிருவந்தைசிர்சா
ளிருமதைபருட்டிணிக்கோணிபகுந்நாவிசுரத்தோடு
விரவைவேதசிரன்மிருதிமென்றிரிசாமைகுல்லை
யிருடிகொசிகைசுகோணையிலங்குஞ்சாநவிதைவந்தை. ருக

சரயுநீளயமுனைசந்திரவதைநற்சதமாலைசசிர்
விரிசரசுவதிசந்துருவையொடுவிசுவைசெம்மை
தருமருத்துரதைசாற்றும்விகிரணியுடனேதக்க
சரணியினுறும்பஃறீர்த்தஞ்சாற்றுதற்கரிதுமன்னே. ருஉ

*-இறலி-இத்திமரம்.

இவ்வரைதனின்மாலிங்கரேழினலம்விளங்குகின்ற
செவ்வியின்மலைகளெண்ணிலாதனசிறப்புவாய்ப்பப்
பௌவநீராடைசூழுந்தரணியிற்பல்லிடத்து
மெவ்வதீத்தின்பநங்குமபடியினிதிருப்பதுண்டால். ௫௪

ஈதலான்மேனாட்சென்றயுகங்களிலிருநிலத்தி
னீதிமிக்குள்ளதென்னாநிகழ்த்தினுங்கலியுகத்தின்
மாதவநதருமந்தானமறைநெறிமுதலியாவும்
போதுறுமபடியெஞ்ஞான்றும்பொருந்துமென்றுரைப்பர்மேலோர்.

வேதநன்முறையாற்சொற்றவிதிப்படிமகங்களாற்றா
நீதிதேர்நிமிமன்னுக்குநெறியுறமமராதித்த
ரேதந்தீர்கலியுகத்திலிவ்வுலகிலவமெய்தக்
காதல்கொள்வார்களொன்னுமுனிவராகநவின்றாரால். ௫௫

பின்னுமம்முனிவர்சொல்வார்பெருநிலவரைப்பினுள்ளும்
பொன்னிறப்பொருனையென்னப்புகலிருநதிகள்சூழு
மங்கிலநாப்பட்பத்தியறிவொழுக்கத்தினமிகமேலோர்
மன்னுவரென்னச்சொன்னமறைநெறிமொழியுமுண்டால். ௫௬

ஆதலாற் கலியுகத்தி லறமெங்குமலிந்து தோன்றுந்
தீதறு வஞ்சநெஞ்சர் சிற்சிலருளரென் றாலும்
பேதுறு மிருளிலாதுவிளக்கொளிபேணு மற்றே
யீதலு மிரப்போரின்றே லிலதெனவிசைக்கு மாறே. ௫௭

வேறு.

எக்காலமு மெந்தயுகங் களினுந்
தக்காருயர் விண்பதஞ் சார்குவரான்
மிக்காகிய பாவம்விளைப் பவர்கள்
சிக்கார் நரகத்திடை சேர்குவரே. ௫௮

காரார்விட மன்னகடுஞ் சொலரா
நீராருலகோ ரிவணிந்தை சொலத்
தீராத துயர்க்கடல் சேர்ந்தெவரும்
பாராதவெம் பாழ்நர கெய்துவரே. ௫௯

பொல்லாதவர் நன்மை பொருந்துவது
நல்லோர்கள் கொடுந்துயர் நண்ணுவதுந்
தொல்லார் வினையால்வரினுந் தொடர்பாய்
நில்லாதெனநீ டுணர்வோர் மொழிவர். ௬௦

என்றின்னன டன்னுமெழிற் குருவின்
பொன்றுன்னு மலர்க்கழல் போற்றிசெயா
வென்றிங்கிலன் யாவர்விரும் புறுநாட்
குன்றும் நெறிபாவது கூறுமெனா. சூக

வேறு.

திருவுளமகிழ்ந்து சுந்தரானந்தர் செப்புவாரிக்கலி யுகத்தின்
பருவமுழுதிருங் காலனுசாரப் பாதகராமனுமிதர் புவியை
மருவியாளுளில் வருணமுமில்லராய் மறைநெறிசாத்திர முறைக
ளிருளறப்புராண நெறிகளுமில்லரா யறனகன்றிடப்பவ ரடர்வர். சூஉ

இருளுறுமனத்தராகி யேமணங்களிய னெறிப்படிசெய்வ திலதா,
யரிவையர்பலரை யணைந்திடவதுவு மறமெனச்சம்மத மாவர், தெரித
ரும்பருவ மெட்டினிற்சிசுவைப் பயந்திடச்செகத்தனி னரர்க்குப், பரு
வமுப்பதுநற் புருடவாயுளு மெய்பொய் பலங்கொலைவிருத்தியா மெனவும்.

கலர்திரளுவரி மணலினுமதிகங் கலித்திடக் காசினிமடந்தை, ந
லிவுறுதருளாற்காத்திடவரிவாழ் நாரண னகற்கியினுருவாய்த், தலமதிற்
கலரை வதைத்துயரறத்தைத் தளிர்த்திடப்புரிகுவ னெனமுன், னல
மிகுத்தவனுக் கிவையெலாந் திருவினாயகனேயுரைத் தனனால். சூச

எந்தநாட்டனினுங்கட் பிறினமனோபிடறிந்தவலிலையப்புரப்பன்
முந்துபொற்கணனேயெனமாய் முடித்தானமுரண்மிகுமிரணியநாமன்
சிந்தையுட்கலங்கநரவரியுருவாய்ச்சிதைத்தனன் கம்பத்தோனுடனே
மந்தரகிரிக்குநேர்கும்பகருணன்றனையுமிராமனாய்மடித்தான். சூரு

மாமனுங்கஞ்சன்பவுண்டரன்றந்தவக்கிரன்சிந்துநாட்டரசன்
சேமமினரகன்முதற்பலர்களையுந்திறன்மிகுகண்ணனாய்மடித்துங்
காமனேட்படந்தோன்காமன்சேய்க்குலைந்துகவிவிபோதனாப்பொறிகடவி
ப்பூமனுமரசர்திரளொடுபலரைப்பொருகளத்திடைமடித்தனனால். சூசா

வேலையினெழுந்துமதுகயிடவரைவீட்டிவிண்ணவர்துயர்தவிர்த்தான்
மூலமென்றழைத்தகரிக்கருள் புரிந்தான்முன மகரேசன்கொண்மறை
யைச், சேலுருவாகித்திசைமுகற்களித்தான்செகதலமுழுதுமுண்டுமிழு
நீலநன்னிறத்தோன் செயலனைத்தினையு நிகழ்த்து வதனனந்தற்குமரிதே.

வேறு.

புவியினுயகனுதவிற்புவிமகடனக்கோ
ரவமுறுதுகாத்தருள்வதுமவன்பரமவனுங்

தவம்புரிந்துமாதவனெனப்பெயர்கொடன்மையினும்
பவமகற்றுநற்றவமின்றேறப்பலிப்பதொன்றின்றால். சுஅ

சிறந்தமெய்த்தவமென்னினுஞ்செகதலமதனி
லறந்தவத்தினுக்கதிகமாமவற்றுளுமன்னார்
துறந்தவர்க்குமற்றெவர்க்குநற்சுகமுறவளித்தோர்
பிறந்தநற்பலனுளதெனவுரைப்பராற்பெரியோர். சுகூ

என்னக்கூறியவாறெலாமினிதுறக்கேட்டுத்
தன்னகத்தினின்மகிழ்வுறத்தேறிகர்த்தமர்ந்து
நன்னலத்துளீர்யோகத்தினன்குறுவிதங்க
ளின்னதென்றெனக்கருளுவீரெனவியந்திசைப்பார். எ௰

கலிபுகவியற்படலமுற்றிற்று.



ஆக படலம்-கக க்கு திருவிருத்தம் ருசுஉ.



## யோகமுறைப்படலம்.



நிலம்புகழ்சுந்தரமுனிந்தியோகமுறைதனைவிரித்துநிகழ்த்துங்காலை
வலந்தருவதியமமுதலெட்டாகுமவ்வியமம்வகுத்துக்கூறி
னலந்திகழ்சத்தியத்துடனேயலையகழுந்துரையாநுநலைகணீங்கித்
துலங்குபிறர்மனையடையாசசுத்தமுடனிர்த்தமுந்தூய்மையையோதல். க

பொய்யுரையா திடர்கள்பல வரினுமவை பொறுத்துவெறுப்பின்
றிநாளுந், துய்யமனத்தனிலுநுசஞ்சலமகற்றி யெவ்வுயிர்க்குந்துயர்செய்
யாமன்மையகலுங்கருணையுடனிலக்குநாண்மாதாகளபிற்றின்பசித்துக்
கைதவம்வஞ்சனையகற்றலாகுமெனவுணர்வுடையோர்கழறுவாரால். உ

தவமகிழ்ச்சியுண்மையொடுதானமிகுபூசைகளுந்நயவாய்ச்செய்த
னவையகனன்னூல்கேட்டலிசசைபகைமதிநோன்புநனகிறைற்றல்
பவமகனன்னியமமதாமிந்திரியமொடுக்கறவெம்பற்றுநீத்த
லவனிபுகழ்சங்யாசங்காமாதியொழித்தலுயரறிஞருமே. ௩

இவ்வகையவெண்முறைக்குமிசைத்தவிதம்புரிந்துபினராதனங்கள்
செவ்வியமும்மூன்றுகுஞ்சோத்திரங்கோமுகம்பதுமம்வீரஞ்சிங்கம்

கௌவையகல்பத்திரநன்முத்தமயூரஞ்சுகமாங்கனிவாற்சிந்தை [ரால்
யொவ்வியியற்றுறுவிதமுமவிரித்துரைப்பாங்கேளெனப்பின்விளம்புவா

ஊருவுக்குமுழர் தாட்குநடுவாகவுள்ளங்காலிரண்டுமேற்றிச்
சீருடனேயிருமாந்துவீற்றிருத்தல்சோத்திரஞ்செஞ்சகனப்பக்கத்
தாருமிருகாற்பரடியாறிய நன்பெருவிரல்கைமாறிப்பற்றி
நேரிலதுவளைந்துறமேல்விசித்திழுத்தல்கோமுகத்தினீர்மையாமால். ௬

இரண்டுதுடைகளினமீதுமிரண்டுளங்காலேமாற்றியேற்றிவைத்த
றெருண்டவர்கள்பதுமமெனச்செப்புவரால்வலதுபுறத்துடையின்மீது
முரண்கொளிடக்காற்பறட்டைசாத்தியேமாப்படைநன்மொழியுமவீர
மரண்டருமமெனமகிழுமருண்மிகுசுந்தரவினிநாமறையக்கேண்மோ. ௭

பீசக்கீழ்ச்சீவினிபாற்காலிரண்டின்பரடுகளும்பிறங்கச்சேர்த்தி
யாசையுடனிடமுழங்கைசானுநவைத்தங்குலியைவிரித்துநேரே
நாசிநுனிபார்த்திருத்தல்சிங்கமெனநவிலுவாகளப்பீசக்கீழ்ப்
பேசுறுசீவினிப்புறத்துப்பரடிரண்டுமபிடித்தசையாதிருத்தல்பத்ரம். ௮

இடப்பரட்டைசசீவினிபாலழுந்தவைத்தேயிசையாகவலதுகாலின்
றிடப்பரட்டையதன்கீழாய்சசேர்த்திருத்தன் முத்தமிருமுழங்கைசேர
மடக்கியுந்திப்புறத்தழுந்தவைத்திருகைதரையூன்றிவன்மையாக
முடக்கமின்றிக்காணீட்டித்தலைநிமிர்தனமொழிகுவாமயூரமென்றே. ௮

அகமகிழத்தறுவினுக்கெவ்வாறிருக்கிற்சுகமாமோ வவ்வாறுகச்
செகமதனிலிருப்பதுநற்சுகமெனவேசெப்புவராதனங்களின்ன
வகைபெறுமொன்பதுமாகுமவாசிநிலைத்துறமேலோர்வகுத்தவாறே
யிகலில்பிராணயாமவிதியையுமீயுணருமாறியம்புவோமால். ௯

வேறு.

உந்தியின்கீழுதிக்குமோர்நாடிதா
னந்தநாடியின்கண் ணுதியாநிற்கு
மிந்தநாடியெழு பத்தீராயிரம்
வந்துகீழ்நின்று மேல்வளாந்தோங்குமால. ௰

அந்தவாசிமே ருபிமருங்கமைந்
துந்துநேமியென வுடன்முற்றுலாய்
வந்துசூழ்ந்து நிறைவுறுமற்றவை
முந்துறுந்தச வாதத்தின்மூலருமால். ௰௧

அன்னநாடித சத்திற்குமாம்பெயர்
துன்னிடைப்பிங் கலையுஞ்சுழிமுனை

மன்னுகாந்தாரி யத்திமன்சிங்குவை
தன்னலம்புடை யார்குருசங்கினி. ௰௨

இனையவாந்தச நாடியிவற்றினுண்
முனையுளாப்பெறு நாடிகண்மூன்றுமே
புனைநலந்தரு மூக்கின்புழைவழி
தனைநிகர்த்திடா மேன்மையிற்சாருமால். ௰௩

இந்தகைப்பெறு நாடியெல்லாமுணர
துத்தமத்தி னுடன்வெயிலகாற்றுறு
மெய்த்தரைக்கணின் மேவியிருந்ததிற்
சுத்தமான தனுவொடுந்தோன்றியே. ௰௪

பொய்ந்தகவில்லா நியாசபுரிந்துபின்
வைதமெல்லனை மீதிலவரிசையா
லுய்ந்தநற்குசப் புல்லொழுக்காக்கிமீ
மெய்த்ததோலை விரித்ததனைகியே. ௰௫

அத்திமாமுகத் தண்ணலைப்போற்றிசெய
துத்தமக்குரு வின்பதமுன்னியே
சித்துமொத்துக் கிழக்குந்திசையணறே
லுத்தரத்திசை நோக்கியுற்றேயரோ. ௰௬

பழக்கவாதனத் தொன்றும்பகர்ந்திடா
திழுக்கமின்றித் தனுவலமெய்துவே
தழந்தலாகியித் தூலமசைவுறா
விழிந்துனைச்சுழ லாதுவிழித்துமே. ௰௭

புருவநன்னடு மீதுபொருந்துற
வுருகநோக்கி யமுதமுகுபதாய்
விரிகொளுசிறற் சாக்கிரமேவிவே
றொருவிடத்து முறாதுற்றுநோக்கியே, ௰௮

வேறு,

இடைநாடியினுல்வாயுவை யீர்த்தேயுதரத்தைத்
திடமாகவேபூரித் தெழில்சிறக்கும் வகைபுரிந்தே
வுடனுப்பணினமுன் மேவுறவுய்ந்தவ் வழறனினே
யடைவானவிந்துடன் கூடுறவதி ரேசகம்புரிந்தே. ௰௯

மனும்பிங்கலையா லுற்றனவாசி தனைவிடுத்தே
பினும்பிங்கலையால் வாசியை யுதரத்திடைபெருக்கி

யுனூலலிடையான் மெல்லெனவுட லின்புறம்போக்கிப்
பினுமெல்லென விடையாலுடல்பெறுங் காற்றமைப்பதுவே.௨0

என்றிவ்வகை யொருபோதினிலிரு மூன்றுறவியற்றி
னன்றிவ்வகைநா ளொன்றினுமுக்கா லென்றிநாற்கா
லொன்றும்வகைபுரிந்தா னலவுயிர்நாடிசித்தியதாந்
தன்றேகமும்வயநாதமுந் தழைக்குஞ்சுடர்சொலிக்கும். ௨௧

## வேறு.

பண்ணவர்களுறைநாடுஞ் செயலுந்தோன்றும் பண்புடையநாடி சித்தியானூற்பின்னே, யெண்ணிருமாத்திரையளவின்வாசிதன்னையிடை யினூலுடல்பூரித்திடவேறாரு, மண்ணிருமந்திரமான்மந்திரந்தானுகி லுந்தன்னுளத்திருத்தியதற்குப்பின்னர்த், தண்ணுறும்பிங்கலையான்மு ப்பத்திரண்டுமாத்திரையிற் சாந்துமெல்லப்போகச்செய்தே. ௨௨

சேரும்பிராணயாமமெனவுமேலாய்ச் செப்புகின்றகும்பகமென்றி ருவிதத்துட், பூரகரிரேசகத்திற்பொருந்நாதிற்கும் கும்பகமிவ்விரண்டு டனும்பொருந்தாதாகுஞ், சீரியகும்பகந்தனக்குப்பூரகந்தான்செப்பரு மிரேசகமுஞ்சினக்காகும், பாரிடைநின்றெழுந்லுடனுடல் கம்பித்த ல்பயிறல் வெயர்வருமபலிப்பாற்பிரத்யாகாரம். ௨௩

பேரும்விடயத்தகஞ்செலாமற்பற்றும் பின்னுந்தாரணைமனவியாபாரத் திற், சாருதலுமகற்றியுநற் றியானத்தாரும் தருமாறுதாரந் தேயங்க டேர்த, னேருறுமாறுதாரமூலாதாரமுதலாக நிகழ்த்துவரம்மூலாதார மாருமிலிங்கத்தின் கீழ்க்குதத்தின் மேலாயாகியமுக்கோண வடிவமை வதாகும். ௨௪

இத்தகையமூலா தாரத்துண்மேவியிருப்பது குண்டலினிசத்திப டங்கொளுக, மொத்தியன்மும்மண்டலமிட்டுறையுமாங்கணுறைதெய் வமாவதுகணேசனுகு, மெய்த்தசுவாதிட்டானநாலு கோணமேவியேவி லிங்கமூலத்தினண்ணு, மத்தகையநற்றலத்துக் கதிதெய்வந்தானரி மல ருந்தியினுதித்தபிரமனுமே. ௨௫

உந்தியிடைமணிபூரகமு மைங்கோணத்தொளிருமதற்குரியதெய் வந்திருமாலாகு, மிந்துவட்டமதிற்பாதிமார்பகத்தினிலங்குமனுகதந்தெ ய்வமீசனுகும், சுந்தரத்தின் மண்டிலமாய் விசுத்திமேவுங் கடவுளதற் குரியதுசதாசிவான்மாவா, நந்தலில்லாக்கினைபுருவநடுவிலாறுகோணமுற நணுந்தெய்வம்பரமான்வே. ௨௬

இடமிகுஞ்சமாதியினிவ்வாறுதாரஞ்சிக் கெனவேகடந்ததற்குமே லாய்ச்சென்று, கடவுடிருநடனசபைபிரமானந்தங்காறும்போயத் தேய ந்தன்னின்மோதி, யடர்கதலிமுகையொப்பாய் முகங்கவிழ்ந்த வாயிரந் தோடலர்ந்தகறுமலரின்மீது, படர்சோதிவடிவாகவிளங்கு மொன்றைப் பத்தியுடனேவணங்கிப் பணிதல்செய்தே. ௨௭

மாசிலாச்சாக்கரத்தின் மதியந்தன்னின் வயங்குமாகுஞ்சனவக்கி னிபீசத்தாற், பேசுறுமூலாக்கினியை யெழுப்பிநாடி பிறக்கும்வலையத் தினையும்பேதித்தப்பா, லாசுறுவகைமதியை யிளக்கியாங்க ணமிர்தமி டையற்றிடா துகுக்குமாறு, தேசுறவேயியற்றியபின் னமிர்தவெள்ளந் தேக்குறவுண்டகக்களிப்புச் செய்தலாமே. ௨அ

இவ்வகையவியமா தியங்கமெட்டுமிசைவுபெற வியற்றியப்பா லங் கியோகத், தவ்வகையங்கங்களிற் றோன்றொளிகள்யாவு மருக்கனெதி ருடுக்களவி றென்னமட்க, மெய்வகையதன்னொளியே யிடங்கடோறு மேவுறுநல்லொளியாக விளங்குமாறு, செவ்விதிற்பாவித் திருத்தலாகு மென்றுஞ்சிறந்தவதன் பலனுமினிச்செப்பக் கேண்மோ. ௨௯

வேறு.

எத்துணைப் பிணியும்வந் தெய்த லில்லது
சித்திகள் யாவையுஞ் சேர்க்க வல்லது
முத்திரத் துலகினு முடிக லானது
பத்தியிற் பலதொழில் பயில வல்லது. ௩0

மூவரும் புரிதொழின் முடிக்க லானது
தேவர்தஞ் செயலெலாந் தெரிக்க லானது
தாவரும் பிறவியங் கடலுந் தாண்டுதற்
காவதென் றுரைப்பர்க ளதுவலா தரோ. ௩௧

சாங்கிய முறை.

சாங்கிய முணர்ந்தவர் சாற்றுந் தன்மையு
மீங்குனக் குணர்வுற வியம்பக் கேட்டியாற்
பாங்குள பகுதிநல் விகுதிப் பண்பிரண்
டாங்குறை விதங்களை யறிதல் வேண்டுமால். ௩௨

முன்னியல் பகுதியின் முக்குணங் களுந்
துன்னுவ ததி னின்பதுன்ப மோகமு
மன்னுவ செகமதன் வகையிற் காரியத்
தன்னியல் காரண மின்றிச் சார்வுறு. ௩௩

பகுதியின் வடிவமே பகர்ச டங்களாம்
விகுதியே யசலமும் விளங்குஞ் சேதநம்
பகுதிபோகமு முத்தி பபந்து பாரினைத்
தகுதியிற் றருஞ் சுதந்தரம தாகியே. ௩௪

இனையன பகுதியி னியல்பின் மூலமும்
வினைதெரி யட்டகம் விகுதிமூன் றென்று
மனையது பரத்துட னன்ற சூக்குமந்
துனியுறு தூலமிம் மூன்றுஞ் சொல்வரால். ௩௫

வேறு.

மூலமிதுவாமென்ன முனமொழியும் புரியட்டகங் கூறிற்
சீலமுயர் சத்தமே யாதியைந்துந் திகழுமனம்புந்தி
யாலமனைய வகங்காரமாகும விருதிமே காதிக்
கேலவியையும் பிரபஞ்சக்கூ றிதெனவிசைப் பார்கள். ௩௬

நிலைமையாகிவேறொன்றினின்றுதோன்றுதெப்பொருட்குந்
தலைமையாகியுறும்பகுதியெனாறும்பகுதிதானுகா
துலைவிறன்மாத்திரைகளைந்தோடொத்தபுத்திபகங்காரந்
தொலைவில்பகுதியிடைபகுந்தவிகுதியாகச்சொல்வதுவே. ௩௭

தன்மாத்திரைகளைந்துமந்தக்கரணமிரண்டுபகுந்ததனின்
முன்மாத்திறந்திற்றோன்றிவருமுறைபால்விகுதியெனலாகும்
பின்மாவிகாரங்கம்மிடத்திற்பிறக்குஞ்செயலாற்பகுதியுட
னன்மாநிலத்திற்கற்றுணாந்தோவிகுதியெனவுநாட்டினரால். ௩௮

பகருமகங்காரத்தின்வருமனத்தினோடிந்தியங்கள்பத்தும்
புகரிறன்மாத்திரைகளைந்தாம்பூதமைந்துமுண்டாகு
நிகரிலிவைகளிருகசமுநிகழ்த்தில்விகுதியல்லாமற்
றிகழும்பகுதியாகாவாஞ்செய்யபுருடன்வசத்தவே. ௩௯

அந்தப்புருடனென்றினின்றுதொன்றுமையினாலவனிடத்தில்
வந்துதோன்றலொன்றுமின்றான்மதிக்கிற்பகுதிவிகுதிமுத
னிந்தையகனின்மலனாகிநிற்கின்றவனேயேகனுமாய்ப்
பந்தமகலுமவனித்தனவனெனவும்பகர்வரால். ௪௰

ஆனபுருடனுடன்பகுதியனாதியாகுமப்பகுப்பாற்
றானுண்டாகுங்காரணமுந்தகுங்காரியமுங்கருத்தாவென்
றீனமின்மூன்றிதிற்றோன்றுமின்பதுன்பமுதலெவையுந்
தானன்றுணர்தற்கேதுவுடன்றக்கபுருடனுறைவனால். ௪௧

பகுதிதனினின்றதனிடையேபயிலுமூன்றுகுணங்களையு
நிகரில்புருடனுகாவனவணிகழுங்குணத்திற்பற்றிலதா
யகமுள்ளவன்றன்செயலனைத்துமறிவார்க்கிலைவெம்பிறவி
புகலுமவனையுணராதார்புவியில்யோனிநெளுறுஞ்செனிப்பர். ௬௨

சாற்றும்பகுதிவிகுதியுடன்புருடன்றன்மையாவையுமே
யேற்றமாகப்பகுத்துணர்வோரெய்துவார்நற்கதியெனவுந்
தேற்றமுடனேபுகல்வரிதுவய்லாற்றர்க்கந்தேர்நதோர்சொன்
மாற்றற்கரியவிதத்தினையுமுனைப்பாமகிழ்ந்துநீகேளாய். ௬௩

## தர்க்கமுறை.

## வேறு.

திரவியங்குணநற்கன்மஞ்சோசாமானியமவிசேடம்
வருசமவாயம்வைசேடிகமெனவெழுங்குமேழிற்
றிரவியந்தன்னினைந்துபூதங்கள்காலந்திக்கு
மருவியவான்மாமிக்கமனமெனவொன்பதாமே ௬௪

அனையதிற்பூதமைந்துக்கருட்குணமைம்பநாகும்
வினைநிகழ்காலத்தோடுதிக்கிற்குமவிளங்கும்பந்தே
துனியறுமான்மாவெட்டுக்குணங்களிற்றோன்றுமென்று
மனமுமெண்குணத்தினோர்ந்துவைகுவதாகுங்கண்டாய். ௬௫

அந்தவான் மாவிற்சீவான் மாபர மான்மாவென்று
முந்துறு மிரண்டிலிந்த வுலகியற் கியலுமிச்சைச்
சிந்தையிற் பொருந்திநிற்குஞ் சீவான்மா வெனவுநாளும்
பந்தமின் மோக்கவிச்சை யுறும்பர மான்மாவென்றும். ௬௬

## வேறு.

சார்ந்தசமவா யமுதன்மூவகைக் காரணங்களினாற் சகத்தைமுற்று
மார்ந்தகுண மூன்றாலும்படைத்துக்காந் தழித்தேக மாகவெங்குஞ்
சேர்ந்தழிவி னித்தியமா யகண்டபரி பூரணமாய்ச் சிந்தையிலன்பு [வே.
கூர்ந்தளவில் கருணையுடன் குவலயத்தைப் பரிப்பதுநற் பரமான்மா

நல்வினைக டீவினைக ணிலத்திற் புரிந்தவர்தஞ் செயலுக்கேற்பப்
பல்விதமா முடல்களெடுத் திகத்தினுநற் பரத்தினுமே வேறுவேறு
சொல்லரிய வின்பமொடு துன்பமுமே துய்க்கின்ற பேதத்தாலே [ரால்
தொல்லியல்சீ வான்மாக்க ளெண்ணிலகோ டிகளெனவுஞ்சொல்லுவா

ஆகியபல் லுடல்களினு மணுவுருவாய் நித்தியமா யாங்காங்குற்ற
வாகுடைய மனதுமுதன் மற்றுமுள பலபகுதித் தொகைகளெல்லாந்

தாகமுட னிலக்கணவி சாரத்தா லறிந்துணருந் தன்மைதானே
யேகமாய்த் தானுகுந் தத்துவமெய்ஞ் ஞானத்தி னியல்பாமென்றும்.

அன்னவித நல்லறிவாற் பொய்மையெலா மகல்வுறுமாங் கதுபோ ங்காலே, மன்னியவா சாதிபிலதோடம்போ மதுவொழிந்தான் மற்றுமு ள்ளத், துன்னுதரு மாகருமப் பிரவிருத்தி தோடமெல்லா மோடுஞ்செ ன்மப், பின்னம்போ மவைகழிந்தாற் பேரிடர்கண் மூவேழும் பெயரு மென்பர். ௫0

மீமாஞ்சை முறை.

அவ்வகைய லாதுபின்னு மீமாஞ்சை விதத்தினையு மருளக்கேளாய்
செவ்வையுறு கருமமொடு நித்தநைமித் தந்திகழுங் காமியம்பின்
னெவ்வமறு பிராயசித்த மெனவைந்து வினைகளினுற் சீவகோடி
யொவ்வியியற்றியவகையி னின்பதுன்ப மளவையறிந் துதவுமென்றும்.

நித்தநைமித்தியஞ் சீவனிவ்வுடலி லிருக்குமட்டுநெறியிற் செய் தாற்,றுய்த்தபிராரத்தங்க டொலைந்திடும்பின் காமியத்தாற் சுவர்க்கமெ ய்தித், தத்துறலி லாதுசுக மனுபவிப்பர் விலக்கனைத்துந் தவிர்த்தான் மோகத், தொத்துறு பிராயசித்தஞ் சஞ்சாதிகளனைத்து மொழிக்கு மென்றும். ௫௨

அனையசஞ்சி தாதிகளாம்பந்த பாசந்தனை யைங்கரு மத்தாலுந்
தனைநிகரில்கொடு நெருப்புப்பஞ்சை யெரித்தென்னச் சாராமனீக்கி
வினையகலச் சந்ததமு மெஞ்சுறுச் சுவர்க்கமதின மேவிவாச
நனைமலர்க்கற்பநீழ லிருந்தன் முத்தியென மறைகணவிலுமென்றும்.

இத்தூலவினை யனைத்துங்கெட்டுச் சூக்குவினையா யியைய மாயை
யத்தேகந் தனிற்கரத்தே யவரவர்க்கு மின்பதுன்ப மளிப்பதாகு
மெய்த்தால மிசையெருக்கள் கெட்டுநிலன் மேவியதின் விளைக்கலான
வித்தூற்றமிகப்பைங்கூழினைவளர்த்திவிளைவிக்கும்விதம்போலென்றே

# வேதாந்தமுறைப்படலம்.

சைவசித்தாந்தமுறை.

வேறு.

இன்னவாறுமீமாஞ்சையியம்புவ
துன்னுசைவசித்தாந்திகள்சொன்முறை
தன்னிலுஞ்சிலசாற்றுதுங்கேளுறைப்
பின்னருஞ்சுந்தரானந்தர் பேசுவார். ௫௩

## வேறு.

நீங்காத தத்துவத்தினவ்வியத்தங்குணமூன்றுநிகழுமஃதிற்
பாங்கினுயர் சித்தமதிற்புத்தியதிலகங்காரம்பரிந்துதோன்ற
வாங்காரசசைதன்யவதிகாரிபூதாதியனைத்துமாகுந்
தீங்கிலான்மாமனம்ஞானேந்தியம்வைகாரியிடைசெறிவதாமே. ருசு

சித்தமொடுபுத்தியகங்காரமனநான்குமுயர்செவிவாய்கண்மூக்
கொத்தவைநதும்வாக்கொடுபாதமபாணிபாயுருமேயாடுபத்தமைந்துஞ்
சத்தம்பரிசமுருவமிரசங்கந்தைந்துமண்காறழனீர்விண்ணைந்
தித்தகையதத்துவங்களறுநான்குமசுத்தமெனவியம்புவாரால். ருள

ஆற்றின்வருநீர்போலவிடையறாதனுதியாய்ச்சடங்கடோறுந்
தோற்றுதற்குநரிப்பதற்குங்காரணமாயுடல்கடொறுந்தொடர்ந்தான்
னேற்றமதிமயக்காகப்பலவிதமாயின்பதுன்பமிசைத்துவைய [மாவி
மாற்றுநாளமமாயையவினடங்குமிதுவன்மமலமாமெனபர். ருஅ

மந்திரங்களெழுகோடிபதங்களைன்குடன்மறையையுணர்வோர்சொற்ற
தந்திரங்களைந்துமுயர்தத்துவந்தொண்ணூற்றாறுந்தலமீரேழு
நந்தலிலாக்கலைகளைந்தபமெல்லாபகத்திலுறுநசையினேரி
னந்தமிலாதாகிமற்றுமவற்றினுக்குமொன்றுக்கொன்றதிகமாமே.

அன்னவைகளொன்றினொன்றுவியாத்தியுறும்பாந்தமெல்லாமகன்
றுமேலாய்ச், சொனரோதானசத்திதன்வயத்திற்சார்ந்திடவேதொ
ன்னுண்மன்று, ணனடனங்கொண்டருளுநற்சச்சிதானந்தமயமான
நம்பன், றன்னிகரில்லாதவின்பமருளவுபாயமதனிற்சாருவரென்பர்.

## வேதாந்தமுறை.

இத்தகையயோகமுதல்யாவையுமேமறுத்ததனமேலிசைக்கவார்ந்த
வித்தகவேதாந்தமுறைவிகுமபிலருவாயுருவாய்விகற்பமின்றாய்ச
சத்தாகியகணடபரிபூரணமாயந்திகழொளிந்தப்பரமாயெங்கும்
வித்தாகிநின்மலமாய்நித்தமுமாய்விளங்குவதுபிரமமென்றும். சுக

மதியமொன்றுபலகடத்தினிரும்புனலுட்டனதுவிம்பமருவுமாபோல்
விதிமுறையிற்சகமுழுதுமேவுகின்றவுடல்கடொறும்விளங்கியாங்கட்
பதிந்தொழுகும்பொறிகளினன்மதித்தறிதற்கரிதாகும்பணபினூர்ந்து
சதியகலுங்காட்சிமுதற்பிரமாணங்களுமுணராத்தன்மைத்தாமே. சுஉ

மாலையொடுபழுதைவிடவரவெனவேபயங்கொளுமம்மயக்கமெல்லாங்
காலையவிர்கதிரெழலுங்கண்டபணிபொய்யாகிப்பழுதும்வாச

மாலேநிசமாவதுபோன்மாநிலத்தினவித்தைமெய்யாமயக்கந்தீர்ந்தான்
மேலேவருபிறவிமயக்ககன்றிடவிவ்வுலகுபொய்யாய்விளங்குமன்றும்.

அப்பிரமந்தனின்வானந்தோன்றுமதிற்காற்றேன்றுமக்காறன்னிற்
செப்பரியவழறேன்றுமாலவற்றுட்புனறேன்றுஞ்சிறப்பான்மிக்க
வப்புவினிற்செகந்தோன்றுமதிற்பயிராய்ப்பயிரினமுதந்தோன்று [ய்
மொப்பிலதிற்றுவக்காதிதாதனைந்துந்தோன்றுமெனவுரைப்பர்கண்டா

அத்தாதுக்களினைகுழுவினிகழுமன்னகோசமயமதனின்மல்கிச்
சித்தானபிராணமயந்தோன்றுமதினமனோமயந்தான்செனிக்குமஃதி
னைத்துயருமவிஞ்ஞானமயந்தோன்றுமாங்கவற்றினுயர்வான்மிக்க
பத்திமிகுமானந்தமயகோசந்தோனறுமெனப்பகாவல்லோர் கூ௫

தன்னிடந்துத்தோன்றியவானவாயுமுதனைங்கினையுமந்துதானே
மன்னியுளுமபுறத்துநிறைந்திருப்பனேமானவுயாபிரமந்தனபான்
முன்னுதித்தவைமகோசவுருமுடல்கடொறுமுறைவறாமற் [மாறே.
றுன்னியுளுமபுறத்துமெங்குநிறைந்தியலுமெனவுணாநதோர் சொல்லு

நீடொளிகொண்மதிகடங்கடொறுநின்றாற்போற்பிரமநிறைந்துற்
றாலுஞ், சாடிகுடமுடையவயந்தான்கெடுவதலதுவிமபந்தாழ்வறுமற்,
பீடுடைத்தாய்விளங்குமன்னமெபற்றியேசடமசித்தல்பெறுவதல்லாற், கூ
டியிருந்தனவெனினுமபிரமமொன்றுங்குறைவிலதாய்விளங்குமென்றே

வேறு.

பற்பல்விதமாயொருகோவையயிற்றுங்காலையாங்காங்கே
பற்பல்விதத்துமொருநூலேயயிலுமதுபோற்கோசவுருப்
பற்பல்விதமாகையிற்பரமும்பற்பலவிதம்போலிற்குநின்று
பற்பல்விதவைங்கோசதன்மமபற்றுமதிற்றன்பற்றுதால். கூ௮

செய்யுந்தொழிலாற்பலநாமஞ்சேர்ந்துபோகபோக்கியத்தி
னுய்யுநனவுகனவினுடனுறுநற்சுழுத்திதுரியமதி
னெயதுமிவற்றிற்குறுங்காரணமீரேழொடுநான்கெனுமிவைக
ளையமகலுங்காலையெல்லாமழியக்கதியினமர்வாரே. கூகூ

இன்னபலவாறிசைத்தவருமீதலாமல்வெவ்வேறு
பின்னும்பலவாறிசைப்பவரும்பிராணமயத்துக்காதார
மன்னமயமேயென்பரிதாலாங்காரியகாரணமனைத்து
மன்னமிலதேற்பிராணமயமகலுமென்பரான்றோரே. ௱

ஆதலாலேயனாதானத்ததிகமூலகினில்லையென
வோதுமுறைசுந்தரமூர்த்தியுளத்துட்பதிக்கத்தேசிகர்தம்
பாதமலரிற்பணிந்துசித்திபலவுங்கூறவேண்டுமெனக்
காதலுடனேகேட்டியெனத்தவத்திற்சிறந்தோர்கழறினர். எ௧

## இருபத்துமூன்றுசித்துக்களின்விதம்.

### வேறு.

அணிமைமிகுமகிமையுடனகிமைகரோருகரிமை யீசத்துவம்
வசித்துவம்பின், தணிவில்பிராத்தியும் பிரகாமியமுமட்டசித்தியிவை
யாஞ்சாற்றுநூறுமிர்வம், பணிகொண்மனோசெபங்காமரூபந்தோடும்ப
ரகாயப்பிரவேசமியல்சங்கற்ப, மிணையிலாச்சுவச்சந்தவிருந்தியாக்ஞையெ
ழின்மிகுந்தகிரீடானுதெரிசனமமே. எ௨

சீர்மிகுமப்பிரதிகதாகதியுந்தூரசிரவணமிப்பந்துமியோகிகட்காம
ற்று, நேரிறிரிகாலஞகினத்துவமபினரிகழுமபாரத்துவந்துவத்வசித்தி,பா
ர்புகழும்பரர்செயமாந்சித்திமேலும்பகாருடசகியாதித்தம்பசித்தி,
தேர்பரிசித்தாதியவிக்கினந்தையென்னுசசெப்புமிவை யிருபத்துமூன்ற
தாமே. எ௩

தக்கவிவைசெய்குணங்கள்பகரிலண்ட நதரணியெங்குஞ்சார்விக்கு
மணிமைசித்தி, மிச்சபுவிதன்னினமகாமூர்த்தியென்னவிளங்குறவேசெ
யுமகிமையென்னுஞ்சித்தி, தொக்கபகிரண்டமெல்லாமணுரூபததாற்
றோன்றியறிதரசசெயுமாலகிமைசித்தி, திக்கனைத்தும்புகழவுயரானந்த
த்திறசோத்தியெங்குமிருக்கவைக்குங்கரிமைசித்தி எ௪

அரியபுவிவிண்ணுறைவோர்நினைவையெல்லா மறிவிக்குமீசத்துவ
மாகுஞ்சித்தி,பொருள்பலவுஞ்சுவையுறுபதார்த்தத்தோடும் போதரவே
யளிக்கும்வசித்துவமாஞ்சித்தி, தரணியுறைவோமனமிந்தியங்களெல்
லாந்தாணுணர்த்தவல்லதுபிரார்த்தசித்தி, வருபவர்கள்புகன்மொழிகள்
செயல்களன்னார்மனமறிவிக்கும்பிரகாமியமாஞ்சித்தி. எ௫

இன்னனவாமட்டசித்திவிதங்கள்சொன்னோ மினியோகசித்திபத்
துமியம்பக்கேணீ, துன்னுபசிதாகமுடலவெயர்த்திடாமற் றுலங்கவருள்
வதுநூறுமகத்வசித்தி, பினனுமனஞ்சென்றவிட மெல்லாஞ் செல்லும்
பெற்றியருளுவதுமனோசெபமாஞ்சித்தி, கனைகத்தினினைத்தவுருவெ
டுத்துந்தன்மையருள்வதுகாமரூபசித்தி. எ௬

பன்னுதமதுடலைவிட்டுப்பரகாயத்தும்பரவும்பரகாயபிரவேசசித்தி, யுன்னும்பல பொருளினையுந் தினமுமாங்க ளுதவுமிகு சிறபபுடைச்சங்கற்பசித்தி, பின்னமிலா துலகிலென்றுமிறந்திடாதபெற்றிதருஞ்சுவசந்தவிருத்திசித்தி, யன்னவர்கேட்பனவெவருமிலலையென்னுதன்புடனேதரச்செயுமாககினையாஞ்சித்தி. ௭௭

விண்ணவர்கள் கலவிமுதலாயவெல்லாம்விளக்குங்கிரீடானுதெரிசனமாஞ்சித்தி, மண்ணவர்கடேவர்கண்மற்றெவர்க்குமேலாம்வயந்தருமப்பிரதிகதாகதியாஞ்சித்தி, யெண்ணிறந்தோர்புகன்மொழியுஞ்செவியினேற்பவிசைப்பதுநற்றூரசிரவணமாஞ்சித்தி, பண்ணமருமொழியாயிதலதுகுத்ரபஞ்சசித்திவிதத்தினையும்பகரக்கேண்மோ. ௭௮

எதிர்காலநிகழ்கால மிறந்தகால மெனுந்திரிகாலத்தினுறுமியல்பியாவு, மதியாமேயுணர்ந்துவினவுவர்க்குக்கூற வருந்திரிகாலக்கினதத்துமாஞ்சித்தி,யுகதிகொர்ந்திடினும்வடவனலு மருலுமுயருவெட்புச்சீதனத்துக்கொல்காதாகி, யிதமுடனேயவற்றினுளுமெலிவுறாமலிருத்துமபரத்துவந்துவத்வசித்தி. ௭௯

எவர்க்கேனும்வெற்றிபெறக் கருதினவ்வாறிசைப்பதுவேபரர்கள்செயமாகுஞ்சித்தி, யவனிதனிற்பலர்களதிசயிப்பநீரிலக்கினியிற் றரிப்பதுதம்பனமாஞ்சித்தி, தவர்களைப்போலெவர்மனமுங்கனியப்பேசித்தன்வசஞ்செய்வதுபரிசித்தாதியாகு, மிவைகளெலாநற்பதவி முயலுவோர்கட்கிடையூறென்றரியுரைத்தவியல்புகண்டாய். ௮௰

எத்துணையவினைகண்முயல்வோர்க்கானாலுமினியவுயிருதவிபெறுமுடல்கொண்டன்றே, யத்துணையவுயிர்க்குதவியனமேயானுலதற்குமேற்றவமியோகம்விரதமிபாதே, யிந்தரையிறபினும்பிறனில் வேட்கைவீழாதியற்றுவதேநற்றவமாமென்னக்கூறு முத்தரடித்துணை வணங்கியதனைநன்றாய்மொழிகவெனநற்றவருமொழிவார்மன்னே. ௮௧

வேதாந்தமுறைப்படல-முற்றிற்று.

——(*)(*)(*)(*)——

ஆ படலம் ௧௨ க்கு திருவிருத்தம் ௬௬௩.





சிவமயம்.

# பிறனினயவாமைகூறியபடலம்.



நன்னலஞ்செறிசுந்தரநாரிநந்
தன்னிலவாழுந்தகுதியுமோர்க்கலா
மின்னல்கூர்பிறரிற்கருதாமையே
யுன்னுநல்லறமெனவுரைப்பரால். ௧

சிறந்தமர்ந்தொருவன்புணர்தேவியென்
றறிந்துமற்றவட்காமைகொளப்பேயனு
ரிறந்தவர்க்கிணையன்றிப்பிறர்றினவை
பிறந்திறந்துழலும்பெரியராவரே. ௨

எனைத்துணைசெல்வமெய்திவுமேபிற
மனைக்கண்வேட்கைவசத்துறவாரெனிற்
றினைத்துணைத்தெருதேவிலராமென
வனைத்துமோருமறிஞருரைப்பரால். ௩

அன்னமன்னவரின்னலரும்பரும்
மன்னுவார்கண்மருவிடவேரிடா
துன்னுந்தீவிறயமுமெய்துமென்
றுன்னுநல்லுணர்வோர்களிசைப்பதே ௪

அட்டைபற்றுமதேபோலவரிவையர்
நட்டலென்பதைநகுனனுநாடியே
கிட்டிலாருயர்மேனாரிகழ்சிறுவர்
பட்டழுந்துவரீயயப்பாட்டினே. ௫

பின்னுமின்னபெருமிலமீதிரி
வன்னமங்கையர்காதலின்ஞற்றவர்
பன்னருந்துயர்பட்டவர்மாணடவ
ரின்னரென்னவிசைக்கவொண்ணுதரோ. ௬

தேவர்பூமனரம்பையர்செய்ந
மாவலோடுமெமைவுற்நோக்குங்காற
ருவிலாவவன்றன்குருவின்பத
சேவையின்றித்தியங்கினனுமரோ. ௭

அளகைமன்சுதனுநளகூபர
னிளநன்றெடுமேந்திழையாருடன்
குளனிருங்கரையிற்குணனின்றிகின்
றளிவருந்தவனுன்மரமாகினர். ௮

மாதவன்றிருவூருவில்வாநமின்
காதலான்மெய்கலங்கிநற்பூருவென்
றேதும்வேந்தனகபாலவோடேந்தியே
பூதலத்திரப்பான்புகுந்தானரோ. ௯

காதிகாதலம்காளிடையெய்தியாங்
கோதருந்தவஞ்செயயவுருப்பசி
மாதுநோவரக்கணடுமதன்கணைக
கேதுவாய்த்தவந்தீடழிவுற்றனன். ௰

வேறு.

மின்னுங்கயிலைவரையெடுத்தவெய்யோன்கிளைஞருடன்மாண்டான்
பொன்னினுலகாளிந்திரனும்புகலமெய்யனைத்துங்கணனான்
றன்னைநிகரிலாநகுடன்சர்ப்பமாகிவனஞ்சார்ந்தான்
கன்னற்சொலிரேணுகைகளினாற்கார்த்தவீரியனுமாண்டான். ௧௧

முன்னாளயனோசிரமிழந்தான்முரட்சுந்தோபசுந்தருமோர்
மின்னான்மடிந்தார்சம்பரனுமிரதிமயலால்வீவுற்றான்
றன்னேரில்லாவெனறிடுனேசயந்தனுமோர்கண்ணிழந்தா
னென்னேபெண்ணாலிழிவுற்றோரிந்தவுலகிலெக்குண்டோ. ௧௨

விளக்கினொளிமேற்காதலுற்றுவீழ்ந்தாங்கழியுமவிட்டிலமுந்
துளக்கில்பிடியைநத்தியகற்குழியில்விழுந்துதுன்பமுறுந்
துளைக்கைக்கபமுந்தூண்டிலிரைதுய்த்துவருந்துமீனினம்போல்
வளைக்கைமடவார்செயுமயக்கவலைக்குட்படுவோர்வருந்துவார். ௧௩

மாதர்மயக்கின்வீழ்ந்தவர்க்குமதியுங்கதியுமவான்பொருளும்
போதமுதலவாயவெலாம்போமென்றறிவினுயர்ந்தோர்க
ளோதுநூலின்முறையாகவுலகிற்பவமேபெண்ணுருவாய்ப்
பேதிப்பார்நற்குணத்தையன்றைதருப்பெயரும்பேதையராம். ௧௪

கோட்டினுயர்பூச்சூட்டினுநற்குணமின்றாகிமாற்றவட்குக்
காட்டப்புனைந்தவெனமிகவுங்கவன்றுசிறுங்காரிகையார்
கோட்டமானகுணங்களொடுமடமைநீங்காக்கொள்கையினு
ளூட்டினவரைமடவார்களெனவோர்நாமகவில்வாரே. ௧௫

அறனிற்கடையரானவர்க்குமதிகக்கடையர்யாவரெனிற்
பிறனிற்புகுவோரெனமேலோர்பேசுமுறையின்மிறத்தாலு
நெறியற்றுணர்வின்றாகியிந்நீரார்கடல்சூழ்நீளுலகின்
முறையிற்பிறழ்ந்தோர்க்கிழிவுடனேயுயிர்க்குமுடிவுமொருறுமால். கசா

அனையமடவார்தங்குழலையறலோமுகிலோவிருட்பிழம்போ
வெனநெஞ்சகத்தினையாமலிழியுங்கரியபுழுவடர்ந்து
தினமுஞ்சீவிமுடிந்தாலுஞ்சிகுநாறுமிகுமழுக்குப்
புனைவர்மலரையாடவர்தம்புந்திமயக்கும்பொருட்டன்றே. கஎ

சீரில்குறுமயிருறுங்காதைத்திகழும்வள்ளைநிகரெனவு
நீரும்பூளையொழுகும்விழிநீலோற்பலமேநிகரெனவு
மாருமழுக்குப்பல்லைமுல்லையரும்புவிரிந்திலமெனவு
நேரில்சழிகொண்மூக்கையெட்பூநிகராமெனவுநிகழ்த்துவரால். கஅ

நாறுமெச்சிலூறுமிதழைநவில்வார்கடலார்பவளமென
மீறிக்கருங்கட்சிலந்தியெனவிம்முங்கிலபொற்கலசமென
மாறின்மதியங்கரென்னவாய்நீரொழுகிச்சுரிக்குமுகங்
கூறுமெலும்புநரம்புடைத்தோள்கொண்டலணைவுங்கழையென்பர். ககூ

நாற்றமிகுந்தமலசலமுநரம்புகுடர்சுக்கிலங்குருதி
தேற்றமெனுமெய்த்தசைபலவுஞ்செறிந்துதுளைகள்பலவுற்றி
ஞாற்றற்கரியதுன்னாற்றமார்ந்துகசியுமதனமேலோ
ரேற்றமிலதாந்தோற்போர்வையிதுவேமகளிரெனபதுவே. உய

மெய்யிலெழுதுற்கந்தமதைவெளியிற்றோன்றாவகைமறைக்கப்
பொய்கொண்மடவார்மஞ்சணறும்பொடிகளுடலின்மிகப்பூசி
யையர்தருநான்முகனுங்குகனுமிலநாயவர்பயிறல்
செய்வதலதுபசிதாகந்தீர்க்குமெனவேயொதெரியுங்கால். உக

வாயைத்திறக்குமுன்னமெழுநாற்றமதனைமாற்றுதற்கு
மேயபற்கடினந்தோறும்விளக்கிநீராற்கொப்புளித்துத்
தூயதுவர்க்காய்வெற்றிலையுந்துகளிலவங்கமுதல்வாச
மாயவனைத்துங்கொள்வதுவேறரியகுதலைதீர்க்குமென்றே. உஉ

கோலப்புடவைபுனைந்துநறுங்கொங்கைகளின்மேற்கலைதிருத்திச்
சாலப்பணிகள்வையவங்கட்கினையயப்பலவுந்தானணிந்து
நீலக்குழலுமுடித்துவருநெறியாலவருக்கழகலது
வாலைப்பருவமடவார்க்கும்வாய்த்தவியல்பினழகெவையே. உங

ஆயதாற்பவத்தொழிலகற்றியத்தொழிற்
றீயவர்சேர்க்கையுந்தவிர்ந்துதீதறு
தூயநற்குணத்தினர்தொடர்புபற்றியே
தாயெலாவுயிர்க்கெனுந்தகைமையாற்றுவாய். ௪௦

தெள்ளியதவம்பலசெய்துளார்களு
மொள்ளியதுறவினிலுற்றுளார்களு
மெள்ளணவெனுமனமீந்திலாரெனில்
விள்ளருமபரத்துற்றுமபசியின்வெம்புவார். ௪௧

முன்னைநாட்சுவேதனென்றுரைக்குமொய்கழன்
மன்னவன்றவத்தினன்மலருளோன்பதி
மன்னியும்பிறர்க்கனம்வழங்குறாமையாற்
றன்னுடைச்சவத்தினைச்சார்ந்துநுங்கினான். ௪௨

என்றினையாவையும்புகன்றிருந்தவ
நன்றிகொள்சுந்தரானந்தர்தாள்களி
லொன்றியசிந்தையினுவந்துபோற்றியே
வென்றியீரதைவிரித்துரைசெய்வீரென. ௪௩

சுந்தரர்பரிவுடன்சொற்றவாசகஞ்
சிந்தையினுவந்துபன்னாலுந்தேர்ந்துயர்
விந்தைசேர்ஞானநல்விளக்கெனத்திகழ்
சுந்தரானந்தருஞ்சொல்லுவாரரோ. ௪௪

பிறனினயவாமைகூறியபடல-முற்றிற்று.



ஆ படலம் - ௧௫ க்கு திருவிருத்தம் - ௱௮௭.



## சுவேதன்சரித்திரப்படலம்.



துகளறுந்தவச்சுந்தரமுன்னைநாட்
டகவின்மிக்கதயரதராமனுந்
தொகுமரக்கர்திரடொலைத்தேயக
மிகுமகிழ்ச்சியிற்றன்பதிமேவியே.

வங்கர்கொங்கர்மராடர்களாதியாஞ்
சிங்கமன்னதிறலுடைவேந்தெலாம்

பொங்கிருங்கடலென்னப்புடையுற
வங்கண்மாநிலமண்புடனுறுநாள். உ

அகத்தியன்முதலாகியவமல
மகத்துமாதவர்யாவருமாங்குற
வகத்திராவணற்செற்றவனன்னவர்க்
ககத்திலன்புறப்போற்றினருமரோ. ௩

வணங்கியீந்தமணிதிகழாதனத்
துணங்கலின்முனிவோருந்திராக்கநாக்
கிணங்குறுஞ்செயல்யாவுநியமபிரன்
மணங்கணூறும்வனத்தவர்சென்றபின். ௪

தேவர்கட்கிடர்செயுமிலவணனைத்
தாவில்சத்துருக்கன்றனல்வீட்டிநற்
பூவின்மாரிபுலவர்பொழிந்திட
வாவலாயுலகாள்கின்றநாளினே. ரு

மன்னுமாமறையோன்றருமைந்தனைத்
துன்னுநாகங்கடித்தவன்றுஞ்சலும
பன்னிதன்னொடப்பார்புகழ்வேதிய
னின்னருட்டனையன்னுடலேந்தியே. ௬

வந்திராகவன்வாழ்வுறுங்கோவிலின்
முந்துவாய்தற்கண்மொய்ந்தவர்யாவருஞ்
சிந்தைநோவச்சிதைந்தசுதன்றன்னைவைத்
தந்தோவென்செய்வதென்றழுதாரரோ. எ

ஒருமகன்றனைநம்பியுலகிடை
யிருவரும்முயலாமெனவெண்ணினேம்
திருவருஞ்சுதனேயென்னசெய்தனை
யிருநிலத்துனையென்றினிக்காண்பதே. அ

உனையிழந்திவ்வுயிர்வைத்திருப்பதோ
தனையநின்னொடுஞ்சாருதும்யாங்களு
நினையழைத்தநெறியிலெனெம்முயிர்
தனையழைத்தறகாதென்றுசொல்வனே. ௯

நற்றவம்பற்பலனினுஞ்செய்துனைப்
பெற்றதித்துணைப்பெற்றியைக்காணவோ

குற்றமொன் றுங்குறித்த துமிலலைநீ
யிற்றகாரணம்யாதெனவோதுவோம். கஎ

## வே று.

பூதலத்திலிதற்குமுனந்தந்தையர்க்குமுன்றனயரொன்றலின்று
லேதமுறவரசருக்குணீதியின்றுமாதலினலிறந்தான்மைந்தன்
சீதைபதியாகியவிராமனுக்கேபழியாய்நாந்தோவோமெனவு
வோதுகின்றமொழிகேட்டோரோடியிராகவன்றனக்கி துரைப்பதானர்.

கேட்டவுடன்றம்பியர்களுடனமைச்சர்முதலாயகிளையருரோடுங்
கோட்டைமுதல்வாயலிலேசெய்தமிரங்கியமுமைந்தர்குளத்துளானை
நாட்டமுறநோக்கியவன்பனைவருந்துயருசெயலறிந்தாரினக்கண்ணன்
வாட்டமுறநிற்பளவினரதமாமுனிமுதலோரவந்தார்மன்னே. கஉ

வந்தமுனிவரர்மகிழவரன்முறைபூசித்தருளுமன்னர்மன்னன்
சிந்தையுறுதுயரறிந்துநாரதமாமுனியுமவந்துசெப்புவாறு
லிந்தநகர்பபுறத்தொருசூத்திரனபரபுக்கயலாததியற்றுகின்று
னந்தமுறையான்மறையோன்மகனிறந்தகாரணநீயறிதிபின்னும். கந

சூத்திரர்க்குத்தருமசாத்திரமுறையிலிசைத்தாடிசூழ்வுருமற்
காத்திரத்தைமிசவுலர்த்திதலைகிழாய்க்காலமேலாய்த்தான்வந்துற்ற
கோத்திரத்துகியைபாதகொடியதவம்புரிவதினுற்கொடியோர்க்கோதல்
பார்த்திபருக்குரியதெனவுரைத்துமுனிவரர்பழுவத்தெய்தினரே. கச

கூறியநன்மொழிகேட்டுக்கொண்டல்வண்ணன்கவசலைவிண்டுகுளிர்ப்
புண்டாகி,மாறில்புகழ்த்தம்பியரையருகழைத்துச்சிலமாற்றம்வகுத்தல்
செய்வான்,மீறதுயரிடையழுந்துமவேதியனைமனைவியுடன்விலக்கிநீவிர்,
தேறுதல்செய்வித்திறந்தசிறுவனையுந்தயிலமதிற்சேர்மினென்றே. கரு

இந்தவிதமவர்க்குரைத்துவீடணனுண்டிருந்தவிமானத்திலேறிச்
செந்துவர்வாயிதழ்துடிப்பச்செங்கமலாயனமுஞ்சேந்துகாட்டச்
சந்திரனிலதிகவொளிதயங்குகின்றகூர்வாடன்கரத்திற்பற்றி
யிந்திரைநாயகனகர்க்குக்குடதிசையிலதிவிரைவினெய்தினனே. கசு

குடதிசையிற்றேடியங் குகாணுமல்வடதிசையிற்குருகிப்பார்த்துத் [து
திடமுடனேகீட்டிசையுந்தேடியங்குமிலையெனத்தென்றிசையிற் போந்
பெடையொடுநல்லனமகிழப்பிரசமுண்டுதேன்பாடும்பெற்றியாய [டான்
தடமருங்கோர்பாதவத்திற்றலைகீழாய்த்தவஞ்செய்வோன்றன்னைக் கண்

அம்மரத்திற்றலைகீழாய்வாவலெனத் தவம்புரியுமவனை நோக்கித்
தெம்மடங்கும்வடிவேலான்செம்பவளவாய்திறந்துசெப்புவானீ [ன்ன
விம்மிதமாய்த்தவம்புரிந்தாய் நின்மரபைப் பொய்மையின்றி விளம்புகெ
செம்மையிலாத் தவத்தோனுந் தன்னையுள்ளபரிசனைத்துஞ்செப்புவானால்

வாசமலர்த்தொடையல்புனைமன்னவயான் சூத்திரர்தமமரபில்வந்தேன்
பேசுவனென்பெயரினைச்சம்புகனெனவித்தவம்புரியும்பெற்றிமிக்க
தேசுயர்விண்ணவருலகிற்சடத்துடனேசேரவென்றுசெப்பலோடும்
வீசினன்கைவாளினவ்வேலவனுடலந்தலைவேறாய்வீழமன்னோ. ௧௯

வானவர்பூமழைபொழியமறையவராதிகள்கூற மண்ணுலகில்வாழ்வோர்க்
கானவருணத்தருமநிலையழித்தோன்றனையழித்தோனருகிற்றேவர்
கோனிருடிகணத்தவருமுற்றிறந்தோரனைவரொன்றாயகிற்கூடான்வேறு
மேனலமாகியவரங்கேளென்னவியர்துதாசரதிவிளம்புவானால். ௨௦

வேறு.

இந்தவன்றன்னான்மாண்டானெழிற்பிருமறையோன்பால
னத்தகைசிறுவனுய்யவருந்திரனனமேலோடும
வித்தகத்தவத்தோனிருவியானடமறையோனின்ற
புத்திரனுயந்தானென்றுப்புகன்றனன்புலவர்கோமான். ௨௧

நல்லதென்றிராமநம்பிசொல்லொருமுனிவர்தேவர்
வல்லவிந்திரன்றம்மோடவ்வளஞ்செறிபொய்கைநீங்கி
யெல்லையிறவத்தனுனருகுறமுயிருங்கைபெய்தி
யல்லறிரவனொடாங்கணைகமகிழ்ந்திருந்தகாலை. ௨௨

அம்முனிவரனுலாற்றம்பூசனையமரரேற்றப்
பொம்மெனவெழுந்துதங்கள்பொன்னுலகணைந்தபின்னர்
வெம்மைதீர்முனிவன்சீர்சான்றவியப்பயன்றனையனின்ற
செம்மலையணிகவென்றுத்திகழ்மணிக்கோவையீர்ந்தே. ௨௩

இன்னதுதன்னைவிண்ணோர்க்கலதிருநைத்திண்மேவு
மன்னவர்மறைவளளர்மற்றையோர்தரிக்கலாகா
துன்னருமரக்கரெல்லாமொழியவிலவளைத்தகோவே
நின்னியர்குரியவாகுமெனமுனிநிகழ்த்தினானால். ௨௪

பின்னருமுனிசொல்வானிப்பிறங்கொளிமணியின்கோவை
யிந்நிலத்துள்ளதன்றாலிமையவருலகினின்று
பன்னருமறைகளோங்கும்பங்கயனுலகிலுள்ள
தின்னதென்றுரைப்பக்கேட்டிராகவனிதனைச்சொல்வான். ௨௫

இவ்விதமலரின்மேலோனிருக்குநாடதனிலுற்ற
செவ்வியமணியின்கோவையின்னிடைச்சேர்ந்ததன்மை
கௌவைதீர்மனத்தோயெற்குக்கழறுகவென்னலோடும்
பௌவநீகரத்துட்கொண்டமுனிவரன்பகரலுற்றான். உசு

இருசகசிரமாம்வெள்ளநிராக்கதத்திரளையெல்லாம்
பொருசரமாரியாலேபொன்றுவித்துலகமியாவும்
பரிவுறசெங்கோலோச்சும்பார்த்திபதவானசெய்ய
விரிவுறுமிடங்களூடிவிளங்கியகானிற்சென்றேன். உஎ

செல்லவேவாரிடத்தின்றிக்கசிங்கங்கணமுதலவாய
பல்விலங்குகளுமின்றிப்பறவையின்குலங்களின்றிச்
சொல்லுறுமரிநரின்றித்துலங்கியவனத்திருப்ப
னெல்லுறுமலர்களோடுமிலங்கியபொய்கைகண்டேன். உஅ

அன்னதற்கடுத்தினன்றூயவொருமமளிமீதி
லன்னமும்பெடையுந்தூங்கவார்கடலெனவிசால
மன்னியவதனின்பாங்கராமசிதாமற்றெவருமில்லா
துன்னுதற்கரியகாட்சியுமோராசிரமங்கண்டேன். உகூ

வேறு.

ஆயகாலையவிர்கதிரோனயிறும
போயம்மேற்றிசைவாரிபுக்கவே
தீயபாவஞ்செறிதெனவவமிருண்
மேயதாலுயர்சோதியெயருமே ௩0

ஆயகங்குற்பொழுதினையாங்குறும
தூயவாசிரமத்திடைத்துணனினேன்
மேயபின்னாவிடியலின்வெய்யவன
தீயவல்லிருளசித்துவிளங்கினன் ௩க

விடியல்காணவிரிவுறுமப்பொய்கையி
னடுவணோர்சவநாணகணிலகண்டத
னடைவுங்காண்கவென்னுறுங்குறுமபோதின்வா
யிடைநிகழ்ந்ததியம்புதுங்கேட்டியால். ௩உ

வேறு.

அரம்பையர்நடனமாடவமரர்களினிதுசூழ
வரம்பெறுமுனிவர்வாழ்த்தமாகதர்துவன்றியேத்தக்
கரம்பயில்வீணைவல்லோர்கலந்துபண்ணிசைபயிற்றப்
புரந்தரன்வருவதென்னப்பொன்னுயர்தேரில்வந்தான். ௩௩

விண்ணிடைநின் றுவந்தவேந் தனைவிரதம்விட்டு
மண்ணிடையிழிந்துசெய்யமலர்மிகுந்திலங்கும்பொய்கை
நண்ணியச்சவத்தைப்பிய்த்துகணிவயிறாரத்தின்று
தண்ணுறும்புனலுட்கொண்டுதன்பசிதணிந்தோனாகி. ௩௪

தேரின்மீதேறவுன்னிச்சென்றிடுமவனைப்போய்க்
காரணம்யாதோவிந்தக்கயத்திடைசவத்தைத்தின்ன
வீரநீயாவனுற்றதியாதையும்விளம்புகென்னச்
சூரிற்சூரவன்றனுணர்ந்ததுசொல்லக்கேண்மோ. ௩௫

இந்நிலந்தன்னிலுற்றவியலுயிருள்ளவெல்லாந்
தன்னுயிரென்னவுன்னித்தராதலமுறைமையிற்காத்த
மன்னனவைதர்ப்பனென்னுமைந்தனென்பெயர்சுவேத
னன்னியரிருவராகுமவர்களின்மூத்தான்சேட்டான. ௩௬

பின்னவடனக்கேயாபாலனைபிறர்திடவொத்துயர்ந்தை
பொன்னுலகடைந்தானபின்னரொருவருநெறியினளே
மன்னியவீரைந்நூறாயிருடநாளுமகையாண்டு
நன்னலமாகப்பின்னுள்சுதனுக்கவ்வரசைசாலவி. ௩௭

இந்தநல்வனத்தினெய்தியெழின்மிகுந்தவம்பூண்டு
பந்தபாசங்கணீங்கப்பவவினையொருவியோட
விந்தியமொடுக்கிமூவாயிரமெனுமவருடமோர்ந்தே
யந்தணனருளாலொன்றவனுலகமடைந்தானேன். ௩௮

தாதைதன்னுலகினுற்றுந்தாகரும்பசியுமென்னை
மோதிமெய்வருத்தநொந்துமுளரிநான்மலரில்வந்தோன்
பாதமீப்பணிந்துவெய்யபசிப்பிணியெனையிவ்வாறு
நோதகவருத்துந்தன்மைநுவலுதிதெரியவென்றேன். ௩௯

மறையறிந்துலகந்தன்னின்மனனுயிரனைத்துமாக்கு
மிறையெனைநோக்கிமுன்னீயிருநிலவனைப்பிலன்னந்
துறவினரிறவலாளர்சுற்றமுற்றவர்க்குநலகா
நெறியினாற்பசிதாகங்கணினைமிகவருத்தற்கான. ௪0

செய்தநற்றவத்தாலிந்தச்சீர்மிகும்பதத்தினீவந்
தெய்தினையெனினுமன்னமிரவலர்க்கீயாவாற்று
லுய்தரவனைநீர்நிற்கிங்கொருவருமுதவல்செய்யார்
வெய்துறுபசியுநீங்காததற்குநாம்விளம்பக்கேண்மோ. ௪௧

பவளவாயிதழும்முத்துப்பற்களுங்
குவளைநீள்விழியும்மறற்கூந்தலு
நவையிலாநுதலுஞ்சிபுருவங்கள்
குவிதலாகிநிமிருங்குயங்களும் ௫0

மற்றுமுற்றுமம்மங்கைவனப்பெலா
முற்றுநோக்கியுயர்மதனம்பினால்
வெற்றிமன்னனன்மிகமெலிவெய்தியக்
குற்றமற்றுயர்கோதையையாண்ணரியே. ௫௧

மதியும்வெட்குமமர்முகச்செவ்வியுஞ்
சுதைநிகர்க்குநன்மொழித்தோகையே
யிதமதாய்நினைப்பெறற்கரியாவரைக்
குதலைநன்மொழிகூறுகவென்றனன். ௫௨

அரசனிவ்வுரைகூறவம்மங்கையும்
புரசையானையுளாய்புகலீர்நரு
வரிவைநாஞ்சுரசைப்பெயராமென
வுரைசெய்தண்டனுற்றுநெருங்கியே. ௫௩

கண்டுநேர்பொரியாய்மலர்க்காமன்விற்
கொண்டேயுங்கலையாருகுலேந்தேனுந்தன்
செண்டிணைத்தனஞ்சேர்த்தெனைக்காவெனத்
தண்டன்மெல்லியல்கான்பிசைத்தாழ்ந்தனன். ௫௪

புகலும்வார்த்தைநகைப்பேட்டலும்பூவைமெய்
மிகநடுங்கிவிளம்புமறிவிலோ
யகமதில்லெனநந்தன்முறைநிந்தித்தற்
செகமெலாமோர்கணத்திடைதீயுமே. ௫௫

இவ்விடத்திலிராதிக்கணத்தின்வே
றெவ்விடத்தெனினுஞ்செல்கவென்னலு
நொவ்விடைக்குயிலேமனநோவது
செவ்விதன்றெனசசேரநெருங்கினன். ௫௬

மீறிமேல்வரக்கண்டந்தமெல்லியல்
பாறினாள்பின்றொடர்ந்தவன்பண்புடன்
கூறும்வார்த்தையின்றுயக்குழல்பற்றியீர்த்
தூறுமாசையொழித்தகன்றனரோ. ௫௭

## வேறு.

கொடியோனிவைசெய்தகலைவந்தக்கோதையழுதுநனேயின்றோ
ணடிமேல்விழுந்துநடந்தவெல்லாமறையவுசநன்முகமுனிந்து
படிமேற்றீராப்பழியையிந்தப்படிசெய்தண்டன்கிளைநாடு
முடிவில்பொருளும்பொடியாகமுடிகவெனவப்படிமுடிந்த. ருஅ

ஆதலாலத்தண்டனரசாண்டபுவியேதண்டகமென்
றோதுமடவியாயதுநல்லுசநன்மொழியாலவ்வனத்திற்
காதுஞ்சினக்கோளரிமுதலவிலங்குபறவைகாண்டரிது
சீதமலிநற்றவத்தோர்கள்சேர்ந்துநாளும் வாழ்வதுவே. ருகூ

நன்றித்தவஞ்செய்முனிவரெநதநாளுமவணின்மேவுவதா
லென்றுமுகில்கள்காப்பருவமேலச்சிறந்துவான்பிலிற்றும்
வென்றியுடையாயிதுமுனைநாள்விளைந்ததெனவாமுனிகூறத்
துன்றுகழலோனவற்றொழுதுதுலங்குமையோத்தியிற்சேர்ந்தான். கூ௰

ஐயவிவைகண்முன்னிகழ்ந்ததெனசசொல்சுந்தரானந்தர்
செய்யகமலமலர்ப்பதத்திற்சிரத்தைப்பொருத்திசற்றறிவே
னுய்யுமாறுபலவிதமுமுரைக்கத்தெளிவுற்றேனினியான்
செய்யுமாறுசொல்லுமெனசசிந்தைமகிழ்ந்நாரியர்சொல்வார். கூக

சுவேதன்சரித்திரப்படல-முற்றிற்று.

ஆ படலம்கச-க்கு திருவிருத்தம் - எசஅ.



# விடைபெற்றுமீண்டபடலம்.



ஆதிநூன்முறையாற்றவம்மகம்யோகமனைத்தினுமுயர்ந்துளதறனே
யோதுமவவறமெண்ணுன்கினுமுயர்ந்ததோதனதானமாதலினுற்
பூதலமதனிலிளைத்துவந்தவர்க்குப்போதுநவோதனமருளி
மாதவர்மகிழவனக்கொடிபடைத்துவாழுதிபோதியென்றிசைத்தார். க

அன்புடன்சுந்தரானந்தரிவ்வாறறைந்திடவனைத்தையுங்கேட்டாங்
கின்பசாகரத்திலாழ்ந்தவரெனத்ததும்பிருநயங்களிபயுறவவர்தம்
மென்பதமலரின்முறையுடன்வணங்கிவிடைபெற்றுச்சதுர்வரையீசன்
றன்பதம்பணிந்தேயிருகரஞ்சிரத்திற்சாத்திகற்றுதிகள்சாற்றினரால். உ

ஆதியுநடுவுமீறுமாயகிலபுவனங்களனைத்துந்தானாகி
நீதியிற்படைத்தல்காத்தலோடழித்தலெனுநெறிமூன்றிற்குமிறையாய்
மாதொருபாகமாகிநின்றருளும்வள்ளலேமறைகணேடரிய
சோதியேசதுரவரைமிசையோங்குஞ்சுந்தரமாலிங்கநாதா. ௩

காமனையெரித்தாய்கிரதிநொந்தழக்கருணையினவட்கருள்புரிந்தாய்
சோமனைநதியின்மருங்குற நந்தனது துய்யசெஞ்சடைமிசையணிந்தாய்
வாமமேகலையார்மயக்கினிலழுந்தாவகநினதருடந்துகாவாய்
பூமனும்பொழிலார்சதுரமால்வரையிற்பொருந்தியமாலிங்கநாதா. ௪

வாசவன்றருவாசன்கொடுஞ்சாபநருந்நந்நிந்திடவருள்புரிந்தாய்
காசினிப்பொற்மேற்கொண்டுமுன்மூன்றுபுரங்களுநீறெழக்காய்ந்தாய்
தேசுயர்விசையன்றனக்குநற்பாசுபதக்கணைசிறப்புறவளித்தாய்
மாசிலாச்சதுரவரைமிசையமரும்வள்ளலேமாலிங்கநாதா ௫

தாருகாவனத்தர்தவஞ்செருக்கழித்துவிப்பதற்குன்னிமாறன்னை
நேரிழையுருவாயேவியாங்கவாறந்நெறியினையசற்றிமாதவர்தம்
காரிகையார்பானகமுணப்புருந்துகற்பழிதரப்பினுங்காத்தாய்
சீர்சிறந்தோங்குஞ்சதுரமாலவரையிற்றிகழ்தருமாலிங்கநாதா. ௬

பூவுலகதனிற்பற்பனுளினும்புன்புலைத்தொழில்புரிபவரிடத்து
மாவலாய்நேசித்தெட்டுனையெனினுமறிவிலாதிகழ்வினைபுரிந்த
பாவினானெனினுநின்றிருக்கருணைபாலித்துக்காப்பதுன்பார
மாவிநாயகனேசதுரமால்வரையிலமர்ந்தருண்மாலிங்கநாதா. ௭

வேனிலைநீரினசையினுழிவிரிதருகானிடையுழலு
மானெனவுலகவியலெனுமயக்கவாரியிலழுந்துறாதருள்வாய்
தேனினுமினியமொழியுடையுமையாள்தேவியோடுபாகமாய்விளங்க
வானவர்புகழுஞ்சதுரமால்வரையில்வைகியமாலிங்கநாதா. ௮

வேறு.

ஆனூர்தியொடுயர்கேதனமுடையாயதழுடையாய்
பானேர்மொழிசசியர்செய்மயல்பாறும்படிபாரும்
வானுனிலங்கெடினுமலைவில்லாய்மலைவில்லாய
தேனார்பொழிற்சதுராசலத்தேவாமகதேவா. ௯

கற்றாரணிந்துரைநாற்கரைகண்டாய்கறைக்கண்டா
முற்றாரணித்தேர்மீப்புரமுனைவாயெந்தன்முனைவா
விற்றாரணிகோளாதனபதிமீதருட்டோழா
மற்றாரணிசதுராசலத்தேவாமகதேவா. ௰

அரிமுன்பெறவடலாழியையளித்தாய்துயரழித்தாய்
சரண்சேர்ந்தவர்க்கருளீந்திடச்சடையாய்திகழ்சடையாய்
பரிவானவெண்மதியோய்பிரமபணியுந்துவெண்மதியோய்
திரமேவியசதுராசலத்தேவாமகதேவா. கக

மையாடரவணியாய்திகழ்பரனின்சரணணியா
மையாவிவணடைந்தேனெனையாளாயகிர்மையாளா
மெய்யாரணிநீற்றாய்வியேவிடும்வேடனைநீற்றாய்
மையார்பொழிற்சதுராசலத்தேவாமகதேவா. கஉ

விடையார்கொடியானேவிரவலர்க்குங்கொடியானே
நெடியோனுடனயன்தேடுறுநீதாவருணீதா
திடமாயுமையிடமேவியசேகாவுவந்தேகா
மடலார்மலர்சசதுராசலத்தேவாமகதேவா. கஙு

பொன்னேதிகழொளியேபுகல்புவிவிண்ணகல்வெளியே
தன்னேரிலாவளியேமிருந்தழனின்னுதல்விழியே
யன்னேயுயரளியேயுமையாமாமலரளியே
மன்னேபுகழ்ச்சதுராசலத்தேவாமகதேவா. கச

நந்தாவொளிமதியேதிகழ்நதிக்கும்மொருபதியே
பந்தார்தனத்துமையன்புறுபதியேயருள்கதியே
யெந்தாயுனைத்துதியேசெயவெழ்கீநலமதியே
சேந்தேன்மலிசதுராசலத்தேவாமகதேவா. கரு

பணியமபுலிக்கிசைந்தாடியபாநாருழைக்காதா
பிணையொன்றுகைநாதாவரம்பெருக்கும்வரநீதா
வினையெங்கணும்போதாமெயினெழிலார்ந்தவினோதா
திணிபொன்றியசதுராசலத்தேவாமகதேவா. கசு

அணிகொன்றையின்முடியாயெலாமழிவெய்தினுமுடியாய்
கணைதங்கியவிழியார்மயல்களையவருள்விளைய
தணிவின்மறைப்பொருளேயுயர்சரணுயினெழ்கருளே
மணிபொங்கொளிசதுராசலத்தேவாமகதேவா. கஎ

வாராய்வரந்தாராய்மனமகிழ்வாயெனைப்பாராய்
சீராயருள்கூராயுறுசெகமாயையுந்தீராய்
தேராருளஞ்சேராதவசேர்ந்தோர்க்கருள்வீரா
தீராவுயர்சதுராசலத்தேவாமகதேவா. கஅ

வே று.

மாநிலமீதிலுற்றமாமாயையினெய்தினரு
மானுயர்கேதனனேநினதடிக்கன்புறினுங்கரை
யீனமுறும்பவங்களையும்விட்டேகுமென்றேமறைக
டானவில்கின்றதுவேசதுர்வரைத்தற்பரமாதேவா. க௯

அண்டங்களெண்ணிலவுநிறைவுற்றருவாயுருவாகித்
தெண்டிரைசூழ்புவியிலுயிர்க்கின்பமெல்லாமாகி
வெண்டலைமாலைபுனைந்திரண்டுவினைக்கயிற்றாட்டிவைக்குந்
தண்டலைவண்டிசைகொள்சதுர்வரைத்தற்பரமாதேவா. உ௰

ஓப்பிலாமாமணியேயுயர்கதோருமத்திருவேரொளியே
யெப்போதுநின்பதமேதுதிசெயுமேழையெனையாளாய்
கைப்போதகவுரிபோர்த்தபயில்கொள்கவரிசேகரந்திலகச்
சர்ப்பாபரணமுளாய்சதுர்வரைச்சங்கரமாதேவா. உக

அன்னைபிதாகுருவுநீயேயன்றிவேறொன்றுமின்றாம்
பொன்னிகர்மேனியனேயகந்தனைபுபொங்கவெனையாளாய்
முன்னசுரேசர்திரளனைத்துமுருகநுல்வீட்டியரு
டன்னிகரில்லாதசதுர்வரைச்சங்கரமாதேவா. உஉ

வாசமலர்தழீத்தொடைபுனைவள்ளலேதெள்ளமிர்தே
பாசமகற்றியெனைநினதருட்பார்வைபுரிந்தாளாய்
தேசுயர்வேணியனேநினதுதிருவடிக்கன்புசெய்தேன்
ருசனென்றேயெனையாள்சதுர்வரைச்சங்கரமாதேவா. உங

வே று.

பண்டுமாமறைநால்வர்க்கருளியபரமேசா
வண்டறைகுழன்மாதர்மயலவித்தெனையாளா
யண்டர்கண்முனிவரயனரியறிவரிதாய
தண்டளிர்பொழின்மேவுஞ்சதுர்வரைமாதேவா. உச

பூவையரொடுநிலனற்பொருளெனுநசைமூன்றி
னாவலினுழலாதுன்னடிமலர்தந்தாளா
பாவலர்புகழ்ந்தேத்தும்பற்பலவளத்தோடுந்
தாவில்சீர்தழைத்தோங்குஞ்சதுர்வரைமாதேவா. உரு

பெண்ணிடத்துறமேலோர்பெண்ணினைத்தலைமேலார்
தண்ணளிமிகுந்தோங்குந்தானுவேயெனையாளா

கண்ணிணையகழ்ந்தியுங்கண்ணப்பர்க்கருணல்குந்
தண்ணுறுஞ்சுனையாருஞ்சதுர்வரைமாதேவா. ௨௬

மூங்கிலினிடைதோன்றிமுன்னமவிண்ணிறைகாத்த
தீங்ககனின்பாதசேவைதந்தெனையாளா
யோங்கறஞ்சான்றன்னையுயர்பொருளெனவுன்னுந்
தாங்கருந்தவர்மேவுஞ்சதுர்வரைமாதேவா. ௨௭

தூதுசுந்தரர்க்காயோர்கோதைநன்னிடஞ்சென்றாய்
பாதகமுதற்றீயபற்றறவெனையாளா
மாதவர்தொறுமமைவகியபொழிறோறுந்
தாதலர்மலர்தூவுஞ்சதுர்வரைமாதேவா. ௨௮

வேறு

எனவிலையபலவும்புகன்றுநெக்குருகியிருவிழிகளிலுநீர்சொரிய
மனதுடன்பொறிகளியைந்துபாடொழுகுநிதிகொன்றையுந்திகழத்
தனதிடப்பாகத்துமையுடன்விடைமேற்சதுர்ப்புயந்துலங்குறத்தோன்
றி,நினதுநெஞ்சகத்திற்கருதியயாதுநிகழ்த்துவாயென்றனனிமலன். ௨௯

மால்விடைப்பாகன்புகன்மொழிகேளாமனமகிழ்சுந்தரமூர்த்தி
சால்புறும்பரத்திற்பிறைனருந்தொழுதுசங்கரசம்புமாதேவா
மேல்வரும்பிறவிப்பரவையிமேதினிதனனில்வந்துறினும்
வேல்விழிமடவார்மயக்கநீத்தறன்மெய்விளக்கநல்லருள்புரியெனவே,

சொல்லியமொழிகள்கேட்டெழுவந்துசுந்தரவனக்கொடிபடைத்து
நல்லியலபுடன்பலவூழிகாலமுநின்னுடமுஞ்சீர்த்திநல்லறனு [ர்
மெல்லொளிசெலுத்துபிடனெலாமபரவியிலங்குநின்மரபினிலுதித்தோ
செல்வமேலோங்கிவாழ்வரென்றுரைத்துமறைந்தனன்சிவபெருமானே.

வேறு.

வேதநாயகனுங்குற்றுவிளம்பியதிருவாகக்கேட்டுக்
காதன்மீதுறச்சிர்கைகளிற்கரன்பதத்தையுன்னிக்
கோதிலாக்குணத்தோரந்தக்குனறினின்றிழிந்தோர்வேணி
மீதுறவிலகித்தோன்றமேதினிதன்னைச்சார்ந்தார். ௩௨

அம்மலையருகிலுள்ளவருந்தவமுதலோர்வந்த
செம்மலைவணங்கியேத்தித்திருமுகநோக்கியெங்கள்
விம்மலைத்தவிர்த்துக்காக்கும்வெள்விடையரனன்பார்ந்த
கைம்மலையனையாயென்னக்கழறினருவகைமிக்கார். ௩௩

அன்னவர்க்கினியவானவசனங்களைத்துங்கூறிப்
பின்னவர்தமையுமோவிப்பெருகியகருணையோடு
முன்னுயர்சதுரவேதாங்கற்கேகெனமொழிதல்செய்த
பொன்னவிர்கருப்பன்கோவிற்பூசகனிடத்திற்சார்ந்தார். ௩௪

கண்டகமகிழ்ச்சிபொங்கக்கனிவுடனெதிர்சென்றுன்ற
தொண்டைவாயுமைபிளைபாகனாறுமலர்ப்பதத்தின்சேவை
கொண்டனைநின்னைநேர்வார்குவலயத்தெவரேயென்றுத்
தண்டலில்கருணையோடுந்தழுவினனென்னடமாதோ. ௩௫

தழுவினேன்றன்னைத்தானுந்தழுவியுள்ளன்புகூர்ந்து
வழுவிலாக்கிரியினுற்றவாறெல்லாமடைவுமோதிப்பின்னர்ப்
பழுதிலாப்பூசகனன்பாலவிடைபெற்றுமீண்டு
குழுவியவனத்தூர்பண்ணைக்கூவனபாரகரையுற்றார். ௩௬

அன்னகர்தன்னிலுள்ளோரனைவருமெதிர்சென்றேத்தி
மின்னவிர்பதந்தநீரால்விளக்கிநன்மலர்சாத்தி
மன்னியவன்பினோடுவணங்கலுங்கிருபைகூர்ந்து
துன்னியகிளைஞர்சூழத்துலங்கவாண்டமர்ந்தவேலை. ௩௭

இந்திரன்காதல்கூருமெழில்வளம்பலவுமெய்துஞ்
சந்தையூர்தன்னின்மேவித்தருமுறையுலகங்காக்கும்
விந்தைசேர்புயக்கூழப்பவேந்தன்றன்கிளைஞரோடும்
வெந்திறற்படைஞரோடுவிருப்புடன்வந்துகண்டான். ௩௮

மணிபொனைவிரைத்தவிஞ்சிவெள்ளருஞ்சேவராயூரி
லணிவருஞ்சீர்த்தியாகவரசனென்றெவரும்போற்றத்
துணையறனெனநாடாளுந்தும்பையஞ்சமிபூமன்
பணியொலிமுழங்கச்சேனைப்பரவையான்வந்துகண்டான். ௩௯

பல்வளஞ்செறிந்திலங்குமப்பையாபுரத்தின்மேவி
யெல்லையில்செல்வமுற்றோர்யாவரும்வந்துகண்டார்
நல்லறஞ்செழிக்குந்தெய்வநாயகபுரத்திலுள்ளோர்
சொல்லருமகிழ்விற்கண்டார்சுந்தரமூர்த்திதன்னை. ௪௰

இந்தநல்வசனங்கேளாவெழிற்றவப்புரிந்துமீண்ட
சுந்தரமூர்த்திசெய்யதுணைப்பதம்பணியவெண்ணிக்
கந்தமார்பொழில்கள்சூழுங்கற்குழநகரினின்று
மைந்தருமற்றுளோரும்வரிசையின்வந்துகண்டார். ௪௧



உ

சிவமயம்.

# அன்னதானப் படலம்.



இனித்துறச்சுந்தரமூர்த்திதந்திருவாய்மலர்ந்தருள்செய்யேவலாலே, கனிபருப்புந்தண்டுலங்காய்வகைகணறுநெய்க்குடங்கள்பாற்குடங்க, டு னியகற்றுமோர்க்குடங்கடயிர்த்தாழிவெற்றிலைநற் றுவர்க்காய்மிக்க, ப னிவரைகள்பலவமரிற்படர்ந்ததெனப்பல்பொருளும்பரிவிற்சேர்த்தார்

வேறு.

ஆயகாலையரிசிகழுந்தநீ
ரேயகாலைநிறைவுசெய்தேகியே
தூயசோலைகள்சூழ்வுறும்பண்ணையிற்
பாயுநட்டபயிர்கடமைழக்கவே ௨

அட்டினன்மனையார்நெருழுதூமமே
விட்டுக்கார்நிறந்தேநகுமியலது
வட்டநேமிவரைநின்றெழுந்துவிண்
டொட்டுலாவுறுஞ்சூன்முகில்போலுமே ௩

ஒள்ளரிதாகியவோதனக்குப்பல்கள்
வெள்ளிமால்வரையென்னவிளங்குவ
தெள்ளிதானபருப்பிரசஞ்சிறந்
தெள்ளருங்கறியாவுமமைத்தனர் ௪

பாயசத்தொடுபாங்குளபச்சடி
யாயகூட்டுக்கறிகளமைத்தனர்
தூய மாங்காய்த் துவட்டலும் பூசணிக்
காயுங் கத்தரிக் காய்க்கறி செயதனர். ௫

கன்னி யின்னறுங் காயைப் பொறித்தனர்
பின்னும் பற்பல் கறிகளும் பெட்புறக்
கன்ன லொன்றிற் கடிதமைத் தாரந்த
நன்னகர்க்கணறுமணம்வீசவே. ௬

முன்னை நாணள னென்னு முடியுடை
மன்னும் வீமன் மடைத்தொழில் செய்தது
மின்ன வன்ன மவைத்தவர்க் கீடல
வென்ன வுற்றவர் யாவரும் ...றவே. ௭

15

கண்டு சுந்தர மூர்த்தி கனிவுற
வுண்டி கொள்பவர் யாவரு முண்கவெண்
றெண்டி சாமுகத் தெங்கணும் கேட்பதாய்க்
கொண்ட னேர்முழ வங்கு வொலிருக்கெனு. ௯

முரசின் பேரொலி கேட்டலு மொய்சடை
யரன்மெய் யன்ப ரனேகரும வந்தனர்
புரியு மாதவப் புண்ணியர் வந்தன
ரிரவ லோர்கள் பலரும்வந் தெய்தினர். ௰

கண்ணி லார்களுங் காலின முடவரு
முண்ணிகழ்ந்தவு ணர்வறியார்களு
மண்ணின் மேற்றவழ்ந் தேவரு வோர்களு
மெண்ணி லோரங் கினிதும வெய்தினா. ௰

காது கேட்கி லருங்கைகயி லோர்களு
மாதுலர்த் தம்பம யாதுமில் லோர்களு
மோதும் வார்த்தையி லூமை யுருப்பிலர்
தீதின் மூப்பின ருமபலர் சோர்ந்தனர் ௧௧

தனது நாயகன் வீந்தவா முன்றரும்
தனைய ரோடவண் சார்குவ ரார்பினு
மனையி லாடவர் மைந்தரைக் கூவிக்கொண்
டினிதின் வைகுதற் கெண்ணியுற் றாரரோ. ௧௨

இந்த வாறுபல ரும்வந் தெய்தவே
முந்து சுந்தர மூர்த்தியும பார்த்துநற்
சிந்தை யிற்களிப் பாற்றிரு நீறவண
வந்து ளோர்க ளெவர்க்கும் வழங்கியே. ௧௩

வந்த மெய்யடி யார்க்கு வரிசையான்
முந்த வாற்று முறைகள் புரிந்துபின்
னந்தமில்லா னன்பர்க்குப் போசகம்
தந்திடும் மெனச் சாற்று மளவினே. ௧௪

## வேறு.

அரனடி யவர்கட் காங்க ளுக்கிய வடிசி றன்னைக்
கரமிசைக் கூடை கூடை யாகவே கடிதி னேந்திப்
பரவுறு மடைகண்மீது படைத்துச் சர்க் கரையி னோடு
நிரை நிரையாக வாழைக் கனிகண் மாங்கனி நிறைத்தே. ௧௫

அப்பமும் வடைகண் மிட்டா யறுசுவைக் கனிக ளோடுஞ்
செப்பரு பருப்பு நெய்யுஞ் சிற்சிலர் டைக்க லுற்று
ரொப்பிலான் பாறேன் மற்று முதவினர் சிலர்க ளன்பா
லப்பணி சடையோ னன்ப ரகமகிழ்ந் தருந்து மாறே. கசு

அனமருந் தினர்க்குப் பின்னு மனமளிப் பார்கள் சில்லோர்
பினும் புளிங் கறியினோடும் பெருகிய தயிரு மோரு
மினிதுற வளிப்பர் சில்லோ ரவ்வரவர்க் கியையுமாறு
கனிவுறு பண்ட மெல்லாங் கனிவுற வளிப்பர் சில்லோர். கஎ

இட்டவர் தமக்குப் பின்னு மனமிட விரைந்து செல்வோர்
திட்டெனக் கறிகளைக் கச் செல்பவர் தயிர்மோ ரீவோர்
முட்டுவர் மூரமோன்ற முடுகுவர் கைமாற் றாகத்
தட்டுவ ரனர்த்தை யுண்போர் தமமனை முவக்கு மாறே. கஅ

இன்னணம் படைத்துப் பின்ன ரிளிடபா யசமு நல்கிக்
கன்னலின் சாறுமற்றுங் கனிவுட னருந்த வூட்டிப்
பன்னரு முபசாரங்கள் பலபல புரிந்த பின்னர்
நன்னல மாகவன்னோ ரருந்திநன் கமர்ந்த காலை கக

## வேறு.

அரசர்மற்று மவணமை ந்தோர்க்கெலாம்
வரிசையாக வழங்கின ரோதனம்
பரிவுதீரப் பலருமுண் டொன்சுவை
விரவியுண்டவ ரொத்து விளங்கினர். உ0

அன்னகாலை யநேகம் படையுடன்
சன்ன னோர்கொடைக் காயபூபதி
மன்ன வேமகிழ்வால்வந் தவர்க்கெலா
நன்னலந்தரு மோதன நல்கினர். உக

முல்லை மாநகர்மேவி மனுமுறை
நல்லறத்தொடு நானிலங் காத்தருள்
சொல்லரும் புகழ்ச்சொக்கலிங் கேந்திர
னெல்லையில் படைசூழவந் தெய்தவே. உஉ

மனதிற்சுந்தர மூர்த்தி மகிழ்வுட
னினிய போநகம் யாருமுண்பீரெனக்
கனிவு டன்வந்த காவலன்சேனையு
நனிமகிழ்ச்சியி னல்விருந் துணடனர். உ௩

விருந்தருந்தி வியந்துறும் வேளையிற்
பொருந்து நல்வளப் போடி நாயக்கனூர்த்
திருந்துசீர்த்தி யுடைச்செக வேந்தர்கோன்
வருந்தலில்படை யோடும்வந் தெய்தினான் ௨௪

சிறந்தமாப்படை சூழச்சேத்தூரில்வா
ழுறந்தவாமனுமங்குவந்தெய்தலுந்
திறம்மிகுந்தசிவகிரியனயமா
பெறும்படைத்திரட்பெட்புடனெய்தினான். ௨௫

பார்த்துசுந்தரமூர்த்திபரிவுட
னீர்த்தவேணிமலனைநெஞ்சகந்
சோத்தியேதிருநீற்றினைத்தூவிய
மாத்திரத்தில்வளர்ந்தனவேவாரணம். ௨௬

வந்தவேந்தர்க்குமாப்படைவீரர்க்கும்
பந்திபந்தியிற்போனகம்பாங்குடன்
றந்தகாலையினும்மனந்தாழ்விலா
துந்திமேலுயர்ந்தோங்கியதாமரோ. ௨௭

நாட்டுள்ளோருநகரிலுள்ளோர்களு
மாட்டிற்பற்பலகருறைமாந்தரு
மீட்டுமீட்டும்விரும்பிவந்தோர்களும்
வாட்டந்தீரவமுதினைமாந்தினர் ௨௮

பின்னுமன்னநற்பெற்றியிறோந்தன
மன்னும்வெள்ளிமலைநிகராகவே
துன்னுகின்றதுகண்டுதொன்னீதியார்
மன்னர்பின்னெனவருமகிழ்வெய்தியே. ௨௯

இனையவாச்சரியமமெந்தநாளினுங்
கனைகடற்புவிமீதினுங்கண்டில
முனைநிகழ்ந்ததெனமொழிந்தாரிலை
யெனமகிழ்ந்திவையீசன்செயல்கொலோ. ௩௦

நவிலுங்காலையினாட்டுப்புறத்துளார்
குவிதலாயந்தக்கோநகரெய்தலு
மிவர்கட்கன்னமினிதளிமின்னென
நவையிலோதனமியாவர்க்குநல்கினார். ௩௧

தேவபோனகந்தேக்கவுண்டாரென
யாவருங்களிப்பெய்திநல்லன்புடன்
றாவரும்புகழ்ச்சுந்தரமூர்த்திதம்
மேவருங்கழல்போற்றிவிளம்புவார். ௧௨

வேறு.

நன்றினிக்கோவிற்சென்று நவிலுநெற்பண்டியீர்த்துச்
சென்றுறுமெருதுசெந்நெற்றிரவியமுதலவாய
குன்றலில்பொருள்கட்கியாங்கள்கூறருங்காவலாக
வென்றும்வாழ்வுறுவோம்வேறொன்றெண்ணுவதில்லையென்றார். ௧௩

போனகமுண்டோர்க்கெல்லாம்புனைநறுங் கலவைச்சந்த
மேனலமாகத்தந்துமென்மலர்ச்சரங்களீந்தே
யானவெள்ளிலைபடைக்காயன்புடனருளலோடுந்
தானலமாகவாங்கட்சகலருமினிதுபெற்றார். ௧௪

அருந்தவர்முதலோர்க்கெல்லாமாடையாபரணத்தோடுந்
திருந்துபல்பொருளுமன்னோர்நினைவையிற்களிக்குமாறு
வருந்தலின்மனத்தினோடும்வழங்கினன்புவிக்குவந்து
கருந்தடமுகில்களொன்றுங்களிவுறப்பொழியுமாறே. ௧௫

இடைகடைமுதலென்றேதுமெழில்மிகும்வள்ளலானோர்
படியிடையினையவாறுபகரம்புரிந்தாரில்லை
துடியிடையுமையாள்பாகனன்புறுந்தொண்டரன்னக்
கொடைநிகரியற்றுவோரிக்குவலயத்தெவரேயென்னு. ௧௬

தன்னிகரில்லாவென்றித்தும்பைபசாரியன்பாற்
பொன்னவிரரிமுகத்துத்தண்டிகையுடன்பல்பொன்னும்
பன்னலவிளைவுமோங்கும்பூமிநற்பண்ணையெல்லா
மன்னவர்மன்னன்சீர்த்திவளரச்சுந்தரர்க்குத்தந்தான். ௧௭

வம்பவிழ்மாலைவேயுமார்பினன்பினுங்கூறேந்திர
நம்பரனருள்பெற்றோங்குநல்லசுந்தரமூர்த்திக்குச்
செம்பொனாற்குடைசுருட்டிசேர்ந்துறுபொருள்களியாவு
மும்பரும்வியப்பதாகவுதவினனென்பமாதோ ௧௮

மண்டலம்புகழ்சாப்பிட்டேமருவுங்காமயமகீபன்
விண்டலம்விளககுமீன்களெனமிளிர்முத்துமாலை
தண்டலிலணிகண்மற்றுஞ்சாற்றுதற்கரியபொன்னுங்
கொண்டனோர்கரத்துவள்ளல்கொடுத்தனனென்பமாதோ. ௧௯

மருவலர்தம்மைவென்றுமநுமுறைசெங்கோலோச்சிப்
பரிசனத்துடனேமுல்லைப்பதியமர்வேந்தன்பார்ந்து
சரிகைசேர்ந்திலங்கும்பட்டுவெத்திரஞ்சகலமான
வரிசைசுந்தரமூர்த்திக்குமகிழ்ந்தினிதளிப்பதானான். ௬0

மற்றுளவேந்தரியாருமவரவர்மனத்திலன்பா
லுற்றபல்பொருள்களெல்லாமுதவினர்செல்வமோங்குங்
குற்றமின்மனைநல்வாழ்க்கைகொண்டவர்மனத்திலன்பு
பற்றசுந்தரமூர்த்திக்குப்பற்பல்காணிக்கையீந்தார். ௬௧

இனையனநிகழுங்காலையெழின்மிகுமேனையூர்வாழ்
தனைநிகரில்லாச்சீர்த்திதழைக்குந்துப்பையசாமி
கனைகழலரசர்மற்றோரியாவருங்களிந்துகேட்ப
மனதினிற்கருணைபொங்கிமகிழ்ந்திவையுரைப்பதானான். ௬௨

இவ்வறமெந்தஞான்றும்பிசகிடாதுவளர்வதாகச்
செவ்வியவருடந்தோறும்வருந்திரைப்பொருளிற்காற்பங்
கெவ்வமின்றாகநாளுமீதுமென்றுரைக்கமற்றோ
ரவ்வகையாகயாமுமளித்துமென்றுரைப்பதானார். ௬௩

மற்றுளோரெவருந்தங்கண்மனத்திடையுவகைகூர்ந்து
பற்றுடன்யாங்களாற்றும்பயிர்த்தொழில்விளைவுதன்னிற்
குற்றமிலறத்திற்கைந்திலொருபங்குகொடுப்போமென்று
வெற்றிசேர்வணிகர்மற்றோரம்முறைவிளம்பினாரே. ௬௪

ஆயவைபுகன்றெல்லோருமகத்திடைமகிழ்ச்சிபொங்க
மாயைதீர்சுந்தரேசர்மலர்ப்பதம்பணிந்துபோற்றித்
தூயமாதவர்களீசன்றொண்டர்கடுகடூரன்பர்
மேயமெய்யடியரோடும்விருப்புடனுறைவதானார். ௬௫

அன்னதானப்படலமுற்றிற்று.



ஆ படலம்-கசு-க்கு திருவிருத்தம்-அசுய.

உ

சிவமயம்.

# பரிகலப்பிரசாதமகிமைப்படலம்.

——(*)(*)(*)(*)——

காருவந்துபல்லுயிர்க்குநல்குமாறுகருணைகொள்சுந்தரமூர்த்திகனி ந்தவன்பா, னீருலவுகடலாடையுலகுளோர்க்கு நைவுறவோதனமருளி மகிழுங்காலைச், சீருயர்கட்டிக்குளத்திராமலிங்க தேசிகராங்கெய்துதலு ஞ்சிறப்பான்மிக்க, தாருலவுமேவர்தம்முதலெவருமேத்தித்தாடொழுதோ ராசனத்திற்சார்வித்தாரே. க

அந்தவாதனத்தின்மிசையிருந்து செய்யவருந்தவர்சுந்தரமூர்த்திவத னநோக்கிச், சிந்தைமகிழ்வார்சதுரவரையினெய்தித்திரும்பியவாறனைத் தையுநீசெப்புகென்னச், சுந்தரமூர்த்தியுமவரைவணங்கியந்தத்தொலைவ ரையினிகழ்ந்தனமற்றெவையுஞ்சொல்லப், பந்தமறுமுனிவர்மிகு மகிழ் ச்சியெய்திப்பார்வேந்தாமுதலெவர்க்கும்பகர்வதானார். உ

இன்னணஞ்சுந்தரமூர்த்தியன்பினிறைந்தடியர்பெறுமனதானத்தினன் மைபெற்றீர், நனைலமுற்றபவங்களைத்துந் தீர்ந்தீர்நானிலத்திலும க்கிணையார்நவிலுங்காலை, யன்னதினுமதிகபலனுய்ந்தகேய்ந்தவரனடி யர்பரிகலத்தின்மிச்சிலொரு, முன்னுறுகுமரியகுட்டமுடலெண்குற்றமு ற்றவருமருந்திலகன்றுயாவதாமால. ௩

ஆயபலபாதகமுமகலுமென்னுவரனுமைக்குக்கூறியதையறைதுநீ வீர், தூயமனத்துடனிருந்துகேண்மின மேருட்டுலங்கியுயர்காந்திருவர் க்கேந்தலான, தேய்விலபுகழுகுவென்பான்மகிழ்வாலெந்ததேயத்தின திசெயமுந்தெரிவானுன்னி, யோயவிலகதிப்புட்பகவிமானத்தேறியுயர்ந் தவொருவரையின்மிசையுற்றகாலை. ச

வேறு.

அம்மாமலைமீதிலமர்ந்தருள்வோன்
செம்மான்கரத்தேந்தியதேவர்தொழு
மெம்மான்மகிழ்பூசையியற்றுதல்செய்
மெய்ம்மாதவனவ்விடைமேவுதலும். ரு

அவன்மேவியகந்திருவாக்கரசன்
றவன்மேனியெழில்கண்டுதன்மனதி
லிவன்போல்பவரெவ்வுலகத்துமிலர்
சிவனேயிவனென்றுதன்சிந்தைகொளா. சா

அன்போடவ்வருந்தவன் றாளின்மிசை
துன்போடப்பணிந்துதுதித்தவினே
ரென்போடரவம்புனையீசனைமிக்
கின்போடிதயத்திலிருத்தியநீ. ௭

மின்னார்திருமேனிகொளெம்பெருமான்
றன்னாருண்மேவுதவத்துளவா
வென்னாவிவணுற்றதெனக்கிசையா
யென்னாமகிழ்வெய்தியவன்புகலுவான். ௮

இவண்மேவியநன்மையியம்புதுங்கேள்
பவநாசனெனுமறைநூல்பகருஞ்
சிவனிவ்வரைமேற்றிருலிங்கமதாய்
நவையின்றியெந்நாளுமிருப்பதுவே. ௯

முன்னாட்புரமூன்றெரிசெய்தபிரான்
றன்னாற்புரிதன்மைகள்யாவையுமே
யென்னாற்புகழற்கெளிதன்றெனினுந்
தொன்னாணிகழ்வுற்றமைசொல்லுதுங்கேள். ௰

மேனாளவன்செய்வினையின்வலியாற்
கூனாயுடற்குட்டமிகுந்துளதா
யூனாறியபுண்ணொடுகண்ணிலதாய்த்
தானாயுழல்வானித்தரணியிலே. ௧௧

விரதன்னெனுநாமங்கொள்வேதியனோர்
கரமின்றிக்கலிக்கோரிருக்கையதா
யொருநாறுகிழிவுகொளளும்முடையான்
றிருவில்லவனிவ்வரைசேர்ந்தனனே. ௧௨

இவனெய்தியிருப்பதுணர்ந்திலனோர்
நவைநீங்கியகின்னரனின்னகமவாழ்
சிவனன்புறத்தீஞ்சுவையோதனமாங்
கவனைவேதனம்புரிந்தானபினே. ௧௩

வேறு.

நந்தமீசனறனக்குநன்காற்றிய
வந்தநற்பிரசாதமருந்தியே
சிந்தையன்பிற்பரிகலசேடத்தை
யிந்தநலவரைமீதெறிந்தேகினன். ௧௪

அந்தக்கன்னித்தளிரவனெய்திய
வந்தணாளன்றனக்கயல்வீழ்தலு
மூந்தும்வெம்பசியாலுளம்வாடிமெய்
சோர்ந்துளான்செவியாலும்றுநோக்கியே. கரு

ஒருகையாலவனுற்றுத்தடவிநற்
பரிகலத்தைப்பரிந்துகொண்டானமுகம்
தரியான்மணங்கல்டுசுவைந்தன
வருநறுஞ்சுவைபார்த்துடன்மாந்தினான். கசா

அன்னகன்னிதருளினைப்பியத்தன்னை
றின்னவேசெய்நதீவினையோடவன்
மன்னும்வெம்பசிதீரதுமகிழ்ந்தன
னினனலசசுவையுணடவரெனனவே. கஎ

பொருந்துமுன்பிணியாவும்புறஞ்செல
வருந்துமூப்புமறைந்திறைமாறவே
திருந்துகண்ணொளிமிகெனத்தோன்றவாங்
கிருந்தனனல்லிளமையுமெய்தியே கஅ

இன்னவாயவெழிலுருவெய்துறற்
கென்னமாதவமயாமபுரிந்தோமென
வுன்னியேயிவனுற்றுயர்கோவிலினை
மன்னியீசனமலரடிபோற்றியே ககூ

மலைவிலோன்றன்மலரடிககன்பனுண
ணிலைகொலாரமக்கிவவுருவுய்த்தனென்
றலகிலாமகிழ்வெய்தியகனறுநீ
ளிலைகொளோர்மரத்தினமருங்கெயதினான். உ0

பின்னுமன்னபெருந்தவனுசசியிற்
பன்னருங்கதிரப்பாறுவநவெய்தலுங்
கன்னலின்சொலிபாகன்கனிவுற
வன்னனைவேதித்தாங்கவனுண்டரோ. உக

பரிகலத்தினைப்பக்கத்துவீசலு
மரியவேதியனக்குற்றுநோக்கியே
விரைவினெய்திவிரும்பியருந்திநற்
பொருவிலாவுயர்பொன்வடிவாகினான். உஉ

## வேறு.

கன்னல்விற்கொண்டதனெனக்கவினகொள்வேதியன்றனைக்
கின்னரன்பரிந்துநோக்கிக்கேடிலாத்தவத்துளோய
யென்னகாரியத்தினிங்ஙனெய்தினென்னுமனத்
துனனியன்னவன்மருங்கினுற்றுநின்றபோதின்வாய். உ௩

வந்துநின்றகின்னரண்மலர்ப்பதத்தின்முட்டியுறச்
சிந்தையன்புகொண்டுபோற்றிநின்றவேதசுளான்றனைப்
பந்தமற்றவிவனுமன்புபற்றநோக்கியையநீ
ரெந்தநாடிங்குற்றதன்மைபாதுகூறுமென்னவே. உ௪

ஐயவெற்கோர்நாடுமென்றியாகமெங்குங்குட்டமா
யுய்யவேதும்வழியிலேனவேனென்றுநோக்கவிழியிலேன்
செய்யுமாறுமுணாகிலேன்முன்செயதசெய்யவினையினாற்
பையவேகியுநவந்தும்படர்வரைக்கணெய்தினேன். உ௫

இந்தமால்வரைக்கணுற்றவீசன்பூசைசெயதநீர்
முந்தவீசும்பரிகலத்தின்மூழுமெந்தனபவமெலாஞ்
சிந்தியிந்தவாறுமேனிதிகழுவெயதினேனெனு
வந்தவார்த்தைகேட்டகமமகிழ்ந்துபின்னரறைகுவான். உ௬

ஓங்குசைவர்பரிகலம்பெற்றோர்க்குவிணணோருறையுளுந்
தீங்ககற்றிமேவுமென்றுசெப்புநாலுவேதமும்
பாங்குடன்றங்கெருஞ்சிலன்புபற்றவன்னோர்ப்பணிகுவோர்
நீங்கரும்பதத்திலுற்றுநீடுவாழ்வரென்பரால். உ௭

## வேறு.

ஆதலாலீசனன்றொண்டர்ப்பெருமையாரறிந்துசொல்வார்
வேதங்கள்விதித்தற்கில்லைவிண்டுவுமுணரற்பாற்றே
சீதமாமதியஞ்சூடுஞ்சிவனறிவானேவன்றே
வோதுதற்கெளியவன்றாலறிந்தவாறுரைப்பக்கேளும். உ௮

ஆணவமீத்தவன்பர்சன்னிதியடையப்பெற்றோர்
பூணரும்பவங்கடீர்ந்துபுண்ணியராகவாழ்ந்து
வேணசித்திகளுமபெற்றுவிண்ணவரொதிர்சென்றேத்தக்
காணருங்கதியிற்சேர்வர்பின்னுநாங்கழறக்கேண்மோ. உ௯

தொண்டர்தமமுருவேயீசன்றுகளறுவடிவமாகும்
விண்டவெவ்வினையோர்மற்றோர்மெய்யினைக்கையாற்றீண்டிற்

றண்டலில்பவமுஞ்சென்மசாகரந்தனையுநீந்தி
யண்டர்கடமக்குமேலாயமர்வரென்றுரைக்கும்வேதம். ௩௰

அண்ணலார்மகிமைதன்னோடன்பர்கள்பெருமையெல்லாம்
பண்ணுயர்வேதநான்கும்பகர்வதற்கரியவாகு
நண்ணருங்கல்விதேர்ந்தநாவிரண்டாயிரத்துந்
திண்ணஞ்சேரனந்தனாலுஞ்செப்புதற்கியலாதன்றே. ௩௧

எங்கணும்புகழ்பெற்றோங்குமீசன்மெய்யடியரானோர்
பங்கமின்மேவிதன்னைப்பரிக்கவேண்டாமன்னோர்
செங்கைகள்வீசியாண்டுஞ்செல்லுறுங்காலையாக்கை
தங்குகால்படப்பெற்றோர்கள்பவமெலாந்தவிருமன்றே. ௩௨

வேறு.

இன்னனவாகமுன்னிகழ்ந்தவின்கதை
யுன்னருந்தவத்தீர்நாமுரைத்ததும்வேடர்கண்
மன்னியமரபினன்புரிந்தமாபவந்
தன்னையிவ்வாறெனச்சாற்றலாவதோ. ௩௩

அன்னயவனொருபகலடவியெய்தித்தன்
முனைவருமுயிரொராமொய்ம்பினால்வதைத்
தினியகூவிளநிழலெய்தலுற்றனன்
றினகரனுச்சியிற்சேருங்காலையே. ௩௪

கூவிளநிழலிடையிருந்தவேடர்கோ
னவலாயிவ்விடையரியதண்புனன்
மேவவோர்தடம்வெகுவிரைவினுற்றுமென்
றேவலாளருக்குரைத்தேகினனரோ. ௩௫

மன்னவன்கூறியமாற்றங்கேட்டவண்
தன்னிகரில்லவேடர்தடமுண்டாக்கினர்
பின்னருஞ்சிலதுநாட்கழித்தபின்றையோர்
நன்னலத்தவத்துளானவணண்ணினான். ௩௬

வெய்யலிற்சென்றுளம்வருந்திவேர்வெழு
மெய்யினனறும்புனல்விரும்பித்துய்த்துப்பின்
மையகன்றொளிர்வில்வமரத்தினீழலிற்
றுய்யவன்மகிழ்வொடுதுலங்கும்போதினே. ௩௭

வேடர்கட்கரசனும்வேட்டையாடியக்
காடெலாமலைந்துதண்ணீரின்காதலா

லோடிவந்தத்தடத்துதகமுண்டதன்
மாடுறுவில்வமாநிழற்குவந்தனன். ௩௯

அத்தவத்துயர்ந்தவனருகினையதனு
மெய்த்தவன்மேற்படுகாற்றில்வேடர்கோன்
மித்தையாமுடலிடைகழுவவெமபவ
மத்திகள்போலவெந்தயலின்வீழ்ந்தவே. ௩௮

கண்டனன்வேடாகட்கிரைவன்கண்களாற்
றண்டவிலிவன்பெருந்தவனென்றுன்னியே
தொண்டனுனகெனத்தொழுதகாலேயி
லண்டருமகிழ்தவனறைகின்றனரோ. ௬௰

முனனாநீபுண்ணிய முயன்றதன்மையா
லின்னகூவிளநிழலெய்தப்பெற்றனை
யுனனுமிவவிலையினீரோர்துளிப்பெறின்
மன்னியபாவங்களகோடிமாயுமே. ௬௧

இனையவிலவந்துறுமிலைகணமூன்றுமே
வினையகவீசசுரன்விழிகண்மூன்றெனறு
மனையதுவேயரனுருவமமென்றுந்
தனைநிகரிறிலாமறைகளசாற்றுமால் ௬௨

இம்மரத்தொருவருக்கனனமீந்திடில்
வெம்மைதீரதரவெகுகோடிபோக்கனந்
செமமையினுதவியபலனைசிறப்புறு
மெய்மமுறையியற்றெனவிளமபியேகினன். ௬௩

தவனுரைமுறைப்படிதனதுசிந்தையி
லவமகனறிடவனதானமாற்றியே
நவையகல்சுற்றமுநன்குசூழ்வரச
சிவன்மலர்ப்பதத்திடைசேர்ந்துளானரோ. ௬௪

வேறு.

நான்மறையுணருவோர்தநற்குலத்துதித்தோன்கேட்ப
மேனலமானகின்னராதிபனவிரித்தவெல்லாந்
தானுயர்சைவனாகுதனக்குரைத்தானென்றீசன்
றேன்மொழியுமைக்குமேனாள்செப்பியவுண்மைகண்டீர். ௬௫

என்றிவையனைத்துங்கூறியிராமலிங்கையரேக
நன்றெனவுவந்தெல்லோருநனிமகிழ்ந்திருக்குங்காலை

யொன்றியநோயாசெய்யவுருப்பிழந்தவர்களெல்லாஞ்
சென்றுமேலவர்கணீத்தபரிகலஞ்சிறப்பினேற்றார். ௬௬

ஏற்றவையருந்தித்தம்பாலிருங்குறையனைத்துநீங்கி
மேற்றிகழ்வடிவத்தோடுவிளங்கியசெயலைநோக்கி
நாற்றிசையிருந்தும்போருநம்பரனடியார்பாதம்
போற்றிசெயதிவர்கண்மேன்மைபுகலுதற்கரிதாமென்றே. ௬௭

சுந்தரமூர்த்திசெய்யதுணைமலர்ப்பதங்கள்போற்றி
வந்தவரெவருந்தங்கண்மாநகர்க்கேகப்பின்னர்ச்
சிந்தையின்மகிழ்வுபொங்கத்தினந்தினமவருவோர்க்கெல்லா
நந்தலிலன்னதானஞ்குறைவியற்றினாரால். ௬௮

இனையனநிகழுநாளிலெங்குஞ்சுந்தரரன்பாரந்து
மனையறம்வளர்க்குமாற்றான் மாநிலத்துறைவோர்க்கெல்லாந்
துனியகல்கருணைநல்கத்தொல்புவிவலமதாகப்
புனைநலத்துடனேவந்தசெயலினைப்புகலலுற்றும். ௬௯

பரிகலபிரசாதமகிமைப்படல-முற்றிற்று.

—(*)(*)(*)(*)—

ஆக படலம் கஉ க்கு திருவிருத்தம் - அ௮௬௯.

# புவிவலஞ்செய்தபடலம்.

அத்திருநகரின்கீழ்பாலமுகியகோவிலாற்றிப்
புத்திரருடனுமிக்கபுகழ்பெறுங்கிளைஞர்பின்னு
மித்திரராகியுள்ளோர்மேவுறமேவுவோர்க்கு
நித்தியமன்னதானநிகழ்வுறவருளிச்செய்தே. ௧

கேசரிமுகத்தையுற்றகிளரொளிமானமூர்ந்து
மாசில்சாமரைசுருட்டியாதியவரிசைசூழப்
பேசரும்பல்லியங்கள்பிரளயங்கூடுநாளில்
வீசுறுதிரையாராழியொலியெனமுழக்கம்விம்ம. ௨

பரிசனஞ்சூழ்ந்துசெல்லப்பாவையர்பல்லாண்டோதப்
பரிவினெற்பொதிகடாங்கற்கியைந்தபண்டிகள்பின்போதத்
திருவுறைமார்பனுங்கட்டிகமுங்கோவிந்தநல்லூர்க்
கருமையினெய்துந்தன்மையறிந்தகமகிழ்வுபொங்க ௩

சகலசெல்வமுமுற்றோங்குந்தாண்டவராயபூமன்
மகவுடனெதிர்சென்றேத்தித்தாளிணைபணிந்துசெய்ய
முகமன்செய்தழைத்தின்மேவிமொய்மலரமளிமீதின்
மகிழ்வுடனிருத்திப்பின்னர்வழங்கினன்விருந்துமன்றோ. ௪

சுந்தரமூர்த்திபக்கற்றன்னினைவரவருமாங்க
ணந்தரநாட்டிலுள்ளவமிர்துண்டுகளித்தார்மானச்
சிந்தையின்மகிழ்ச்சிகூர்ந்திகழ்மனமருத்திப்பின்னர்ச்
சந்தொடுமலர்நாம்பூலஞ்சகலர்க்குமகிழ்வினல்கி. ௫

ஒருபத்துக்கோட்டைநெல்லுமுபயருந்திரண்டும்பொன்னுந்
தருநிகர்கரத்துவள்ளறண்டவராயனல்கப்
பரிவுடனேற்றுமற்றோர்காணிக்கைபலவுங்கொண்டு
திருமலிநகரினுள்ளோர்யாவர்க்குந்திருநீறீந்தே. ௬

சுந்தரமூர்த்தியேகந்துறங்கியநெறியின்வாழ்வோர்
சிந்தையினுவந்துமிக்கவிறப்புடனெதிர்சென்றேத்தித்
தந்தமக்கியையுமானகாணிக்கைதகவினாலக
நந்தலிறவத்தின்மிக்கோர்நனிமகிழ்வுடனேகொண்டு. ௭

கண்டவரெவரும்போற்றிக்களிவிற்றெக்கட்களகணல்கக்
கொண்டகமகிழ்வின்மீனுமிகைவளர்கூடமெய்தி
யண்டர்கண்மகிழுஞ்சொக்கலிங்கரங்கயற்கண்ணம்மை
தண்டலில்பதங்கள்போற்றிநற்குங்கொடைப்பொழிலிற்சார்ந்தே. ௮

ஓதனமமைத்துவந்தோர்யாவர்க்குமுதவலோடு
மாதவத்தினர்மற்றுள்ளோரெவர்களுமிவணின்மாந்திக்
காதன்மீதூறவன்புகனிந்தவணிருக்குங்காலை
சோதனைதெரியக்கானன்றொல்படைத்திரளோடுற்றே. ௯

சுந்தரமூர்த்திதன்னைநோக்கியேசொல்வானிங்கு
வந்தவர்தங்கட்கெல்லாமனமகிழ்ந்தன்னதானந்
தந்தருளுதிரென்றன்பார்சார்ந்தனம்யாங்களுண்ணப்
பந்திவைத்தினிதினன்னம்படையுமென்றுரைக்குங்காலை. ௰

சிவபரஞ்சுடரைநெஞ்சிற்றுதித்துநற்றிருநீறள்ளி
நவையகலோதனத்தினல்கிவந்தவர்கட்கெல்லா
மிவைநிகரென்றுங்காண்டற்கரிதெனவினிதினல்க
வவர்களெல்லோருந்தேவவமிர்துண்டுகளித்தாரொத்தார். ௧௧

இனையபோகங்கண்மாந்தியின்பமெய்தியவெல்லோர்க்கும்
புனைநறுமாலைசந்தம்பொருவிறுமபூணல்க
வனையகான்சாய்புநோக்கியகத்தினின்மகிழ்ந்துபோற்றி
வினையறுதவத்தோர்க்காண்டுவேண்டுவவருளினனால். ௧௨

மற்றுளோரெவருந்தங்கண்மனங்களிகூரியைந்தவாறே
நெற்பொதியொடுபல்பொன்னுநிரைநிரைதருதலோடும்
வெற்றிகொள்சுந்தரேசர்விருப்புடனனைத்துமேற்று
நற்றவரறிஞர்சூழாலயத்துட்டிருக்குங்காலை. ௧௩

வேறு.

வங்கர்சிங்களர்குருகர்சீனர்மராடர்முச்சலரொட்டியர்
கொங்கர்கோசலர்குடகர்குந்தளர்கூடர்சாளர்கேகயர்கேரள
ரங்கராந்திரர்துளுவர்சோனகர்யவனர்கன்னடர்மாளவர்
சிங்கமன்னவர்யாவருந்திறைதந்திறைஞ்சியசெய்பனர். ௧௪

பரிகரிப்படைபொறியெனப்புகல்சதுவிதப்படைபலவுமா
னரன்விருப்புடனுமைதிருப்பதியுடனருட்புவிகாவலன
மருவலர்க்கரியேறனையாமதனெனத்திகழ்வடிவுமான
பரிவுறப்பலகலைகள்கற்றுயர்பருணிதர்க்குயர்நாயகன். ௧௫

இடிகிடென்றுலகதிர்வுறும்படிமணிப்பொறிகடவுவோன்
றிடுதிடென்னவுகாந்தவாரிமுழக்கின்மேற்றிகழ்முரசினான்
றடுதடென்றுகுரங்கள்தாவுதயங்குவெம்பரிகடவுவோன்
முடிபுனைந்துயர்வாரிசூழ்புவிமுழுதுமாண்மணிமன்னவன். ௧௬

புனைநலங்கொளிராமநாதபுரத்தின்மேவுபுரந்தரன்
றனைநிகர்த்ததிடங்கொள்சேதுபதிக்குமற்றிவைசாற்றலு
மனையசுந்தரமூர்த்திதன்னையழைத்திவண்வருவீரென
வினையநற்றிருமனுவுடன்சிலதூதர்தம்மையும்மேவவே. ௧௭

வேறு.

வந்துதூதர்வணங்கிநற்சுந்தரர்
சிந்தையுட்களிப்பெய்தத்திருமனுந்
தந்தபோதவைநார்ந்துத்தயையுடன்
முந்துளோர்க்குமுகமன்கள்கூறியே. ௧௮

மதுரைமாநகர்மேவியமாந்தர்கள்
சதுருடன்வந்துதாடொழுவாழ்த்தி

பதியையோவிப்படர்நெறியுற்றுளோர்
கதுமெனத்தொடர்ந்தேகழல்போற்றலும். கக

சிந்தையிற்கனிவாற்றிருநீற்றினைத்
தந்துமிக்கதயையுடன்வாழ்த்தியே
வந்துமன்னகரத்தினமருக்குற
முந்துதூதரிவைமொழிந்தாரரோ. உ௰

சேதுபூபதிகேட்டுத்திகழ்கய
மீதினுற்றுமிகும்படைசூழ்வர
மோதுமாபலவியம்யாவுமுழங்காற்
காதலோடெதிர்சென்றுகண்டானரோ. உக

கண்டுபோற்றிக்கசிவுறுமன்பினுற்
கொண்டுதன்னுயர்கோமனையெய்தியே
யண்டருமகிழானத்தேற்றுவித்
துண்டிமற்றவுவந்தருள்செய்தரோ. உஉ

அரிமுகத்தவிசையணிகளும
பரிகளுமதிறைபிரமபொன்னுநல்
விரிமணிச்சுடர்வெண்முத்துமாலையும
பரிவுடனபலபாணடிலுநல்கவே உங

இனிதுவாதவையேற்றுயர்சுந்தரர்
கனிவின்வாழ்த்திக்கடிநகர்மாந்தர்க
ளனைவருமவந்தடித்துவாழ்த்தவு
மனமகிழ்ந்தவர்க்கருள்வழங்கியே. உச

முன்னுறுங்கிளையானவர்மொய்ம்புடன்
மன்னிவாழும்வளநகரெங்கணுந்
துன்னுறுங்குனிசுந்தரரன்பினு
னெனலப்படைசூழ்வரநாடியே. உரு

முரசுகாகளமெங்குமுழங்கொலி
விரவக்கேட்டவர்மெய்புளகெய்தாற
பரிவிற்சுந்தரர்பாதங்கள்போற்றிசெய
தருளுடன்விடைபெற்றகன்றாரரோ. உசா

ஆயகாலையிலாற்றங்கரைப்பதி
மேயபெத்தணபூபதிமெய்யுரை

கூயினுனெனத்தூதுவர்கூறலுந்
தேய்வில்சீர்த்தியுளோரங்குசெல்லவே. உள

வே று.

சுந்தரமூர்த்திவந்தாரெனுமுரைசொல்லக்கேட்டுச
சிந்தையின்மகிழ்ச்சிகூர்ந்துசென்றெதிர்கண்டுபோற்றி
யிந்திராலயத்துக்கொப்பாயிலங்குங்கோமனையினுய்த்து
வந்தவர்தங்கட்கெல்லாமகிழ்வுடனவிருந்துசெய்து. உஅ

வேண்டியபொருள்களெல்லாம்விருப்புடன்கொடுக்கவேற்றுக்
காண்டகுமேனிவள்ளல்களிப்புடனிருக்குங்காலை
யீண்டியபுகழான்மிக்கவிளாசைமாநகரையாளுந்
தூண்டருவிளக்கயன்னுமேவியதூதர்வந்தார். உகூ

தூதர்வந்துரைத்தமாற்றஞ்சுந்தரமூர்த்திகேட்டு
மீதுறுகாதலோடுமேவினர்ககாசிகூறித்
தாதருந்துகுக்கும்வெற்றித்தாரபூனெந்தருமொட்டேற்ர
ஞதரவாகவைகும்பதிக்கருகமருங்காலை ஙய

வேந்தர்கள்புகழுமவேர்தன்பரிசுபடைவீரர்சூழ
வார்ந்தபல்லியங்களோங்கவன்புடனெதிர்சென்றேந்தி
யேந்தலேயிஞ்சிசூழுமெழின்மனைநணியுய்த்தாங்கட்
சேர்ந்தவர்தங்கட்கெல்லாஞ்சிறப்புடனசனமீந்தே. ஙக

நித்திலவடமும்பின்னுநிகழ்த்தருமபொருள்கள்யாவுஞ்
சித்தமிக்குவந்துநல்கத்திருவுளமகிழ்வினேற்றுப்
பத்தியிற்பணிந்தோர்கட்கெல்லாம்பரிவுடனுரைகூறி
யத்திருநகரைநீங்கியருளொடுசெல்லுங்காலை. ஙஉ

சிவஞானபுரத்துமாங்கட்சேர்கிராமங்கடோறுந்
தவநெறிச்சுந்தரேசர்தனியுறம்வளர்க்கநல்குந்
தவசங்களனைத்துமவ்வூர்தணிற்களஞ்சியங்கள்சேர்த்துப்
புவியிடைப்புகழ்சேர்வீரபாண்டியபுரத்திலுற்றூர். ஙஙு

அன்னகர்தன்னிலுள்ளோர்க்கருளுடன்வெண்ணீர்ந்து
தன்னிகரில்லாதோங்குஞ்சந்திரகிரியுமற்றும்
பன்னகர்களிற்சேர்ந்துற்றோர்பலர்க்குநல்லருணீந்து
நன்னலக்கிளைஞர்மேவுநகர்தொறும்பரிவிற்சென்றே. ஙச

அகிலாண்டபுரத்துமாங்கண்டுத்துளகர்கடோறும்
புகழ்மிகுவள்ளலெய்தப்போற்றிமற்றவர்களெல்லா
மகமகிழ்வுடனேநல்குங்காணிக்கைபருளினேற்றுத்
தகவுடனவர்கட்கெல்லாந்தகுமுறைவெண்ணீறீந்தே. ௧௫

பாஞ்சாலநகரில்வீரபாண்டியனெதிர்சென்றேத்தத்
தாஞ்சால்பினெய்திமிக்கதயையுடன்வெணணீறீந்து
தேஞ்சாலியுகுக்குந்தாலஞ்செறிவளநாட்டையாளு
மாஞ்சாலியுவந்துநல்குங்காணிக்கைமகிழ்வினேற்றே. ௧௬

சீலமார்நெறியினுற்றோர்சென்றடிபணியவாழ்த்திக்
கோலமாநகரினபக்கற்குளிர்தருபொழிலின்மேவ
ஞாலமீதுயர்ந்தசீர்த்திநாட்டுங்கெசசலப்பபூமன்
சாலும்பல்லியங்களோங்கத்தளத்துடன்வந்துகணடே. ௧௭

கண்டகமகிழ்ந்துபோற்றிக்கனிவுடன்கோவின்மேவித்
தொண்டருமற்றெவர்க்குமிக்கசுவைதநிகரமுதுநல்கிக்
கொண்டனோர்கரத்தனுங்கோர்நகரமுங்கொடுத்துப்பின்ன
ரெண்டருபொருள்கள்யாவுமீந்தனனென்பமாதோ. ௧௮

மனமிகுமகிழ்வினேற்றமன்னனுமெற்றுளோர்க்கு
நனியுவந்தாசிகூறிநன்னலக்கிளைஞர்நாளும்
புனைநலமாகமேவுநகரங்கடோறும்போந்தாங்
கனைவருமகிழ்ந்துநல்குங்காணிக்கையன்பினேற்றே. ௧௯

செந்நெனன்னகரிலபாங்கர்சோலையுங்கொடையாண்மிக்க
மன்னர்மன்னவனெட்டப்பபூபதிவந்துபோற்றி
நன்னலமிகுந்தகோவினண்ணிப்பின்வந்தோர்க்கெல்லா
மன்னமுமீந்துவேண்டும்பொருள்களுமளபாலீந்தான். ௨௰

சுந்தரர்மகிழ்வினேற்றந்தொன்னகர்தனிலுள்ளோர்
வந்தடிபணியவாழ்த்திவளஞ்செறியவ்வூர்நீங்கிக்
கொந்தலர்சோலைதோறுங்குயிலொடுமயில்கள்கூவ
விந்திரனகரமென்னுவெழின்மெட்டுக்குண்டினபாங்கர். ௨௧

பங்கரினுயர்வான்மிக்கபனிமலர்ச்சோலைதன்னிற்
றீங்கறவத்தோரும்றசேனையொடிருக்குங்காலை
யோங்கியநிதியம்பெற்றவுயரளகேசன்மானத்
தாங்கியசெல்வமுற்றோர்சகலருமிசைந்தொன்றாகி ௨௨

கொடிகுடைவரிசையாவுங்கொண்டெதிர்சென்றுபோற்றித்
திடமிகுநகரினுய்த்துச்சேர்ந்தவர்க்குணவுநல்கி
மடலவிழ்தாரினூர்க்குமகிழ்பல்காணிக்கையீந்தாங்
கிடங்கள்பலவுநல்கியினிதுறவிருந்தபோழ்தின். ௪௩

சுந்தரர்மனதுவந்துதுகளறுதிருநீறள்ளி
வந்தவரெவர்க்குநல்கிமகிழ்ந்துபல்வசனங்கூறி
யந்தநன்னகரைநீங்கியருட்கயிலாயநாதர்
சிந்தையினுவந்துவைகுஞ்சிறந்தபால்வனத்தினெய்தி. ௪௪

அருண்மிகுங்கைலைநாதனையன்னொடானந்தவல்லி
மருமலர்ப்பதங்கள்போற்றிமகிழ்ந்துதோத்திரங்கள்செய்து
பரிவுடனிருக்குங்காலையப்பதிதனனில்வாழ்வோ
ரருமையிற்சென்றுபோற்றியன்புடனழைத்துவந்தே. ௪௫

வந்தவர்தங்கட்கெல்லாமவரிசையின்விருந்துசெய்து
சுந்தரமூர்த்திகாண்டுதுகளில்காணிக்கையீந்தார்
சிந்தையின்மகிழ்வாலேற்றத்திருநகருறைவோர்க்கெல்லா
மந்திரமுறையினவெண்ணீறருளுடன்வழங்கிப்பின்னர். ௪௬

அவ்வளநகரின்பாங்கரணிகிளர்நகர்கடோறுஞ்
செவ்விதினுற்றங்குற்றோர்சீரசபைவளர்க்கவேண்டி
யொவ்வியீதவசம்யாவுமுவந்துநன்காகவாங்காங்
கெவ்வமில்களஞ்சியங்களிசைத்தநிறைமயச்செய்தே. ௪௭

நால்வருணத்துளோருநவிலரும்பொருள்களீந்து
சாலவும்வணங்கியேத்தத்தகவுயாசுந்தரேசா
கோலமுன்னெயிற்றிற்கொண்டகுவலயம்வலஞ்செய்தின்ப
மேலதாயுவந்துகூவனகரிடைமேவுங்காலை. ௪௮

அந்நகர்தன்னிலுள்ளோரனைவருமெதிர்சென்றேத்த
நென்னிறைபண்டிமிக்கநிரைநிரையாகமேவப்
பொன்னொடுமணிகள்யாவும்பொருவறுசாலைசேர்த்து
நன்னலத்துடனேயந்தநகரிடையிருந்தார்மாதோ. ௪௯

புவிவலஞ்செய்தபடல-முற்றிற்று.

---

ஆ படலம் ௧௮-க்கு திருவிருத்தம் ௯௱௩௮.



உ

சிவமயம்.

# மோக்கப்படலம்.

சீர்மிகுசுந்தரேசர்திகழ்மடபதிசெய்தாங்கட்
பேர்மிகுமறையோருண்ணப்பிறங்குசத்திரமுண்டாக்கி
யேர்மிகும்பண்ணையாவுமினிதுறவமைத்துவெற்றித்
தார்மிகுமார்பர்நெஞ்சிற்றனியறமென்றுஞானி. க

பற்பலசமயமென்னப்பகரிருளகற்றுமபானு
தற்பரமானவீசனெனமறைசாற்றுமென்னப்
பற்பலர்க்கையந்தீரப்பகர்ந்துநானிலத்திற்சைவ
நற்சமயத்தையென்றுநன்குறவிருத்திசெய்தே. உ

சேர்ந்தபல்லுயிர்க்குநாளுந்திகழ்முதல்காந்தலேயக்
கூர்தனதானமனைபாற்கொடுத்திவர்தாமருநாளி
லார்ந்தசுந்தரர்மேனுளிமருளியகுமரசாமி
தேர்ந்துபன்னூலுநெஞ்சிற்செருக்கடைந்திருப்பதோர்ந்தே. ௩

மைந்தனையழைத்துநீயிம்மனைக்கொள்வதுதகாதா
னிந்தையிற்பகற்றுயென்னநெறிமறுத்துரைத்தலோடுந்
தந்தையுமுனிந்துநோக்கத்தனயனாவியும்விண்சேரச்
சிந்தையுட்கலங்கியன்னோன்றனைச்சமாதியிற்சேர்த்தாரால். ௪

சுந்தரருள்ளான்மற்றோர்சுதனெனும்பாப்பையாவுந்
தந்தனனிராமலிங்கசாமியுந்தகையாற்பின்னு
மைந்தர்கள்சிலரையன்பின்மகிழ்ந்தினிதிருக்குங்காலை
முந்தயனவிதியாற்பாப்பையாவுயர்மோட்சமுற்றான். ௫

அன்னவனறனக்குவேண்டுஞ்சடங்குகண்முறையினுற்றி
யின்னியற்றனயனசேயர்க்கியைந்தசாத்திரங்களியாவு
மின்னியமந்திரங்கண்மற்றவுமகிழ்விற்சொல்லி
யன்னநற்றனமென்றுமருளுடனியற்றுநாளில். ௬

இந்நிலத்துயர்ந்தோர்க்காருமெழிற்சமாதியினல்லோகந்
தன்னிற்றுமிருத்தற்குஞானித்தகுமுறையரங்கிசைத்து
மன்னியசுதன்சேய்தன்னைமகிழ்வுடன்றழுவியார்க்கு
நன்னலவசனந்தோடுமாசிகணவிறல்செய்தே. ௭

அன்னதானமவனியுளோர்க்கெலா
மின்னதீரவினிமையினல்கிமெய்
துன்னுநெஞ்சந்துறவுபொருந்தியே
மன்னர்யாரும்வணங்கிடவாழுநாள். ௧௫

வேறு.

தமதிளைமலர்த்தாணெஞ்சிற்பரித்தருடம்பியான
குமரசாமியின்வலத்தாற்கூடரும்பொருநர்கணேடித்
தமரர்கள்வாழுந்தெய்வாலயங்கட்புறத்திற்சார்ந்தாங்
கிமயநேருயர்சமிரிக்கவெழின்மனையிசைத்துப்பின்னும் ௧௬

பண்ணைகள்பலவுஞ்சேர்த்துப்பாண்டில்களொருவோடாக்க
ளெண்ணிலாதனவாங்கெய்தவிடையத்துத்தங்கிளோருள்ளார்
நண்ணுறப்புரிந்துபின்னுநாடொறுமறத்தையோம்பி
மண்ணுலகனைத்துஞ்சீர்த்திவளர்வுறவைகுறாரால் ௧௭

செகமதிற்றிருப்பிரமலிங்கதேசிகர்பினன்பா
லகமதிலுவந்துசீர்சேரருணையிலன்னதானப்
புகழ்பெறுமடமொன்றாக்கிப்பொருவறவனமெஞ்ஞான்று
நிகழ்வதாயியற்றிமிக்கநெறியுறவாழுநாளில் ௧௮

வேறு.

தரணிதன்னிலைவலஞ்செய்துதக்கவர்
பரவுகின்றபலநகரங்களின்
மருவியாங்கவரன்பின்வழங்கிய
பொருவில்காணிக்கைப்பொன்மகிழ்ந்தேற்றரோ ௧௯

மன்னர்மற்றோர்மகிழ்வின்வழங்கிய
வுன்னரும்பொருளேற்றுண்மகிழ்ச்சியா
லன்னதானமெஞ்ஞான்றிலுமன்பினீந்
துன்றுஞ்சேதுவிலுற்றுநீராடியே. ௨௰

தேவர்தேவன்றன்சேவடிபோற்றிமீண்
டாவலாகவருணிறைசேதுவின
காவலனுறைகார்தவழிஞ்சிசூழ்
தாவின்மாநகர்சார்ந்தபொழுதினே ௨௧

அந்நகர்க்கிறையன்புடனேசேனையோ
டின்னதீரவெதிர்சென்றுகாண்டலுந்
துன்றுமன்பிற்றுலங்குஞ்சனத்துடன்
மின்னவிர்க்கொளரண்மனைமேவியே, ௨௨

அரசிருந்தருமாசனம்பீடுற
வரிசையிற்பலகோடியர்சூழ்ந்தவன்
விரைமலர்ச்சரண்போற்றவிளங்கிய
திருவுளத்தினமகிழ்ச்சிசிறந்தரோ. ௨௩

மாலுரக்கனிக்குண்டிகைமின்வருந்
சாலுமாதவரெவர்க்குந்தகுமுறை
சீலமானதிருவெண்ணீறீவதை
ஞாலமன்கண்டினைகுறுமகிழ்ந்தரோ. ௨௪

## வேறு.

ஆனையவாகியபூதியின்குடிக்கைமாயராசுவந்துறநோக்கி
நனிநிறைந்துறுஞ்செயலினையுணர்ந்திடநம்பரன்செயலென்னாப்
புனைமலர்ப்பதம்போற்றிவந்தவர்க்கெலாம்போசனமினிதீந்து
கனிவிற்பற்பலபொருள்களுங்கொடுத்திடக்கருத்தினின்மகிழ்ந்தேற்றே

சேதுகாவலன்றனக்குவந்தாசியுஞ்செய்துகுண்டிகைமீதிற்
பூதலத்தினிற்கண்டவரெவர்களும்போற்றுதல்செயவாழ்ந்திக்
காதலோடுதம்பதியினிலெய்திடிக்காசினிபவர்க்கெல்லாம்
போதுறும்படிமுனர்புரியறத்தினுமும்மடிபுரிந்தாரால். ௨௬

கார்க்குவந்திசைகாட்டியசரதத்தினர்க்கினிப்புடைவாழ்நாளிற்
சீர்த்ததம்பினோரருளிபசுபர்களிற்றிசழ்வுறுகலைதோய்ந்த
கூர்த்தநன்மதியுடைப்பழனிக்குமாரசாமியைக்குணத்தன்பாற்
பார்த்துமந்திரமுறைகண்மற்றுள்ளவும்பரிவுறவுறச்செய்தே. ௨௭

கலிநாலாயிரத்துத்தொள்ளாயிரத்தினமேற்கழுமறைபத்தெட்டாகும்
பொலிவுறுநளவருடந்தைமதியொடுபானுவுமெய்திசேய்நாளி
லிலகுந்தேவருமுனிவரும்புகழ்நதியுடையாவரும்பணிந்தேத்த
வலகிலாச்சுகமருள்சமாதியினிடையடங்கினருண்மிக்கோர். ௨௮

ஆனையவாறுணர்ந்தேபழனிக்குமார்சாமியன்புடனங்கண
முனைமுறைப்படிச்சடங்குகள்யாவையுமுடித்துப்பினனுயர்கோவில்
வினையகற்றினோர்தமக்கமைத்தென்றுநால்விளம்புபூசனையாற்றி
யினியவேதனதானமுஞ்ஞான்றினுமினிதுறமகிழ்ந்திந்தே. ௨௯

பன்னருந்திறற்படையுடையசுரரதம்பதியைவீட்டியவேலோன
றன்னுநற்றிருச்செந்திலம்பதியிடைத்தூயநன்மடஞ்செய்தாங்
கன்னதானமெஞ்ஞான்றினுநிகழ்வுறவருள்புரிந்தன்பாக
விங்கிலத்தினிற்புகழ்பரந்துலவநலவின்பமதுடன்வைகி. ௩௰

முன்னுளோர்புரிமுறையினினகரங்கண்முழுவதுமினிதெய்தி
மன்னர்மற்றுளோர்யாவரும்மகிழ்வுடன்வழங்கியபொருளாலுந்
துன்னும்பண்ணைநன்னிலங்களின்விளைவிற்றுலங்கியபொருளாலு
மன்னதானமேமுதலவெண்ணறங்கறமருளியாங்கமர்நாளில். ௩௧

மனதுவந்துநற்றுவாதசாந்தந்தலமருவிநான்முறையாகக்
கனிவிற்சொக்கலிங்கத்துடனேகபறகண்ணனிபொற்பதம்போற்றி
யினிதினோரிடத்திருந்தவனுமறவரெவர்க்குமோதனநல்கிப்
புனிதவாசகங்கேட்டுவந்தவாகெல்லாமபோகமினிதீந்தார் ௩௨

இனையதன்மையையுணர்கலேக்கட்டருமெழிற்றுரைத்தனக்கார
ரனைவரும்பரவந்நகர்மார்தர்கள்யாவருமவணைந்த
வினையின்மாதவர்திருமுகநோக்கிநீர்விருந்திவனெல்லோர்க்கு
நனியருந்துதற்கருளுநிரெனவுயர்கருத்தர்கணவிக்காலே. ௩௩

ஆதிசுந்தரர்தமைநினைந்துயாவெணணீறன்னமிதின்மிசைதூவிக்
காதலாயவணைவந்தவர்தமக்கெலாங்களிப்புறவனைநல்கி
மீதவோதனந்தனையுணப்பலரினும்வேண்டுமென்றிடவீது
நாதனார்செயலெனத்துணைத்தனத்தினர்நனிமனமகிழ்வெய்தி. ௩௪

ஆயபற்பலபணிதிகளாடைகளம்பொனுமிகநல்கி
மேயமேலவரகல்வுறவவ்வினைமேவினோர்க்கருணல்கித்
தூயதம்படைசூழ்வுறப்பல்லியந்துவைப்படவந்நகர்நீங்கி
மாயைநீத்தவாகூடவமாநகரிலமகிழ்வினலைகினர்மாதோ. ௩௫

வைகியவ்வயின்வருபவர்தமக்கெலாமகிழ்வினோதனநல்கித்
துய்யசீர்த்தியெந்நாட்டினுமபரவநர்சுகமுடனவமுநாளின்
மெய்கொள்சுப்பையசாமியையமைத்துநூல்விதிமுறைகளுங்கூறி
வெய்யமாயையினபற்றறவீசனைவிரும்பித்தம்மகஞ்சேர்த்தே. ௩௬

வேறு.

சொல்லுங்கலிநாலாயிரத்துத்தொள்ளாயிரதேழ்பத்தாண்டிற்
செல்லுமபிரசோற்பதிவருடந்திகழாவணிமூவேழ்திகதி
வல்லசெவ்வாய்க்கிழமையன்றுவரங்கொள்பழனிக்குமார்சாமி
யல்லலகல்சமாதியினிலடைந்தாரநாருட்கணியாமே. ௩௭

தந்தையடையச்சுப்பையநற்சாமிமுறைகடவிராமற்
சிந்தைகளிட்பாற்சடங்கனைத்துஞ்செய்துமுடித்துமுன்முறைபோ
லிந்தநிலத்தினெவ்வயினுமெய்தியடைந்தோர்க்கருளீந்து
முந்தபுரிந்தோர்தம்மினும்மடங்கோதனதானம்புரிந்து. ௩௮

தேவர்க்கிறைவன் பயந்தசெழுங்கொடியைமணந்துதேவரெலா
மாவலுடனேபோற்றிசெயவாறுனனத்தோன்மகிழ்ந்தமருந்
காவில்பரங்குன்றத்திலன்னதானமடமொன்றுண்டாக்கி
மேவுமவர்கட்கெப்போதும்விரும்பியனநல்கிடவுய்த்தே. ௩௯

ஆதியுயர்சுந்தரமூர்த்திக்கன்பாற்பூசைதினநடத்தி
நீதியுடனேமற்றவர்க்குநெறியிற்பூசைமுறையாற்றிக்
காதலுடனெண்ணுன்கறமுங்கனிவாறபுரிந்துகளிபெய்தி
போதுசுந்தரமௌனகுருசாமிக்கனைத்துமுறைசெய்தே. ௪௰

வேறு.

சீசிறந்தகலிநாலாயிரத்தினமேலாய்ச்செடபுந்தொள்ளாயிரத்தெண்பத்தெட்டதாக,வார்சருவசித்துவருடத்திற்பானுவருட்டிலாந்தனிலிருபத்திரண்டாந்தேதி, சேர்செவ்வாய்கிழமையிற் சுப்பையசாமிசெகமாயைதீர்ந்தரன்செமபதத்தையுன்னித், தீர்வுறுநற்சுகமருள்சமாதிதன்னிற் சேர்ந்தனராற்றேவாமலர்மாரிபெய்ய. ௪௧

வேறு

அத்தரடங்கமவுனகுருசாமியருளாலாமுறையே
சித்தமகிழ்வாலியற்றியென்றுந்திகழ்பூவரசர்போற்றிசெய
முத்தராஞ்சுந்தரமூர்த்திமுருகார்மலர்த்தாணெஞ்சில்வைத்து
நத்திவருவோர்தமக்கெல்லாநனகினுணவாங்கமுதீந்தே. ௪௨

முன்னோர்புரிந்தமுறைவழியேமுநீராடையுலகனைத்துந்
தந்நேரில்லார்சென்றெவருந்தருமபல்பொருளுமேற்றுநகர்க்
கெந்நேரத்திலெண்ணிலர்களெய்தினுலுமினிதுறநல்
லன்னமொடைமுதற்பலவுமருளினுடனுங்கருள்செய்தே. ௪௩

அன்பாலறத்தையேயம்பித்திருவண்ணுமலேயிலருளாரு
மின்பாலமரவமர்ந்தருணீளவேணியரனசன்னிதிப்பாங்க
ரின்பாலடைந்தோர்க்கிருக்கையுமாயிடர்செய்பசிநோய்மாற்றுவதற்
கின்மாவமுதுமருளமனத்தருளான்மடமொன்றியற்றியே. ௪௪

அறியாமையினுற்றமைமதிக்காதவரைநெறியாலடர்த்துமனு
முறையாலரசுபுரியரசர்முழுதுநட்புமேலோங்கிப்
பிறியாதுறையக்கலேமாதுபிறங்குஞ்சென்னிகுளநகரி
லுறைசுந்தரசாமியையாங்கட்குபசாரத்தோடழைத்துவந்தே. ௪௫

அனையதிருச்சுந்தரசாமியருள்செய்முறையின்யாவர்களு
மினியதொழில்களியற்றுமெனவெழிற்சுந்தரரும்வியப்பெய்தி

முன்னையுள்ளவர்கள்புரியறத்துக்கதிகமுமன்றுபங்குறுநல்
லனதானங்கண்முதலவெண்ணான்கறமுமியற்றியமர்நாளும். ௪௬

மன்னுங்கலியேழின்றினயயாயிரமென்றுனாந்தனவருடந்
துன்னுங்கதிரோன்கோலிருபான்மூன்றாந்திகதிசூர்நாளிற்
பொன்னேநிகர்க்குமௌனகுருசாமிபுவிமாயையைநீத்து
மினனாரன்றாடனேநாடிமிகுஞ்சமாதிமேவினரால் ௪௭

அடங்குமவுனகுருசாமிக்கன்பால்வாலசுந்தரராற்
சடங்குபலவுஞ்செய்வித்துத்தகுநன்முறையுஞ்சாற்றிமிகு
திடங்கொண்மனச்சுந்தரசாமிசென்னிகுளத்திற்சேர்ந்துதம
திடங்கொண்மடத்தினனதானமென்றும்புரிந்தாங்கினிதுற்றார். ௪௮

மோக்கப்படல - முற்றிற்று.

---

ஆ படலம ௧௪க்கு - திருவிருத்தம் - ௬௮௬.

வாலசுந்தரர்

## புண்ணியபரிபாலனப்படலம்.

அகமகிழ்ந்தாளுமத்தன்சமாதியிலடைந்தவோடுஞ்
செகமெலாம்புகழும்வாலசுந்தராதியக்கங்கண்டு
மிகுபுகழ்படைத்ததங்கணமரபுளோர்விருப்பிற்கூடி
முகமன்களபலவுங்கூறிமுகமலரொளிரச்செய்தே.

யாவருங்கூடியோசித்தெழிலுறம்வளர்த்தர்கமேற்ற
தாவருங்குணத்தான்மிக்கோரெவரெனச்சாற்றுங்காலைச்
சேவுயர்துவசனன்பன்சென்னமரெட்டிபட்டி
மேவருஞ்சலப்பேர்வளன்மிக்கானென்றார்சில்லோர்.

சகலருமிசைந்தேயன்னோன்றன்னையாங்கழைத்துநீயே
யிகழ்வறுங்குமாரசாமியெழிற்றுரைசாமியன்பிற்
றிகழுஞ்சுப்பையசாமியுடன்சிறப்புறமித்தன்மஞ்
செகமெலாம்புகழுற்றோங்கநடத்துதல்சீர்த்தென்று.

அன்னயவரிசைந்துவாலசுந்தரரருளினாலே
முன்னையுளோர்புரியரத்தின்மும்மடியதிகமாகப்

புனைநகர்தோறுஞ்சென்றாங்கட்பொருந்துறுபொருள்களாலும்
தனைநிகரில்லாவன்னதானநாடொறுஞ்செய்வாரால் ௪

மன்பதைபுரக்குமாற்றால்வாலசுந்தரருமிக்க
வன்புடனுயர்பல்லக்கினமர்ந்துபல்லியங்களோங்கத்
தன்கிளைச்சுற்றமுற்றோர்சகலருஞ்சூழ்ந்துசெல்ல
மின்கிளரொளியிற்பற்பல்விருதுகளுடனெழுந்தே. ௫

மனுநெறிமுறையினிந்தவையகந்தன்னையாளுங்
கனைகழலரசர்மற்றோரியாவருங்கண்டுபோற்றப்
பனிவளர்மதியமென்னப்பண்புயர்நகர்கடோறும்
புனிதமதாகச்சென்றுபுனைவெண்ணீறினிதினல்கி. ௬

அணியுடனாங்காங்குற்றோரளித்தநற்பொருள்களெல்லா
மிணையிலாமகிழ்வினேற்றாங்கிசைநதபண்டிகண்மீதேற்றி
மணிமிகக்கணகணென்னவொலிப்பமார்க்கங்கடோறுந்
தணிவிலாக்களஞ்சியங்கணிறைவுறச்சாருமென்றும். ௭

வடக்குவேங்கடங்குணக்கின்வாரிதென்பொதிகைபின்னுங்
குடக்குயர்கடலுமென்னக்கூறியபரப்பினெங்குந்
திடத்துடன்பிஞுநதஞ்சீர்த்திசெலுமிடந்தோறுநின்றே
யடக்கரும்பொருட்காணிக்கையாகவாங்குறுவதாமால். ௮

வாலசுந்தரருஞ்சிந்தைமகிழ்வினுடனைத்துமேவிச்
சீலஞ்சேர்குடிகட்கென்றுஞ்சிறப்புறவாசிகூறிக்
கோலமார்நகரினுற்றுக்கொண்டனேர்முழவதிர்த்து
மேலவர்முறையினாற்றும்விதிப்படியறங்களசெய்தே. ௯

ஆதிசுந்தரமூர்த்திக்குள்ளன்பின்முக்காலபூசை
நீதியினியற்றிமுன்னோரியற்றியநெறியினாலே
காதலாயச்சதுரவேங்கட்கினிதுடன்கடகத்திங்கட்
போதுவோர்தமக்குவேண்டும்பொருள்களுமினிதினீந்தே. ௧௦

மீண்டவர்வரும்போதன்புமீதுறவிருக்கச்செய்து
தாண்டவம்புரியுமீசன்றன்னடியவர்மற்றோர்க்கும்
வேண்டியவாறினெண்ணெய்த்தானங்கள்விருப்பிற்செய்து
காண்டகமேலோர்சிந்தைகருதியவுணவுமீந்தே. ௧௧

சுந்தரமூர்த்திசெய்யதுணைமலர்ப்பதங்களன்பாற்
சிந்தையிற்கருதினாளுஞ்செல்வமேன்மேலுமோங்க

வந்தவரெவர்க்குஞ்சிந்தைமகிழ்வுறவசனால்கி
யிந்தமாநிலத்திலென்றுமிசையுறவாழ்வதாமால். ௧௨

பல்வளஞ்செழிக்குமெட்டுக்குண்டெனும்பதியிலென்றுஞ்
செல்வமென்மேலுமோங்கச்சிறக்குஞ்சுப்பையபூம
னல்வளமனையினுற்றநாவலர்தமைக்காத்தாற்போற்
செல்பவர்வறுமைதீரத்திளமனமுவப்பவாரே. ௧௩

மங்கைபங்கமர்வோன்மேனாளருளியவரத்தினாலே
தங்களின்மரபின்வந்தோர்தமக்கெலாம்புகழுண்டாகத்
திங்கண்மும்மாரிபெய்யச்செகமெலாஞ்செழிப்புற்றோங்கத்
துங்கமிக்கன்னதானநாடொறுந்துலங்குமாதோ. ௧௪

மாதவர்முதலாயிந்தமாநிலத்துயர்ந்தோர்க்கெல்லாம்
போதுறவன்னநல்கும்புண்ணியசரிதந்தன்னை
நீதிசேர்முனிவராலுநிகழ்த்துதற்கரிதாமந்தை
யோதினேனெனதுபுன்மையுயர்ந்தவர்தெரிக்குமாறே. ௧௫

சுருதிகள்வாழியீசன்றுணைமலரடிகள்வாழி
யரியயனமரர்வாழியருண்மிகுமுனிவர்வாழி
பொருவிலாச்சுந்தரேசன்பொற்பதம்வாழியன்னார்
மரபுளோரெவரும்வாழிவழங்கனதானம்வாழி. ௧௬

செந்நெலின்பணைகள்சூழ்ந்திலகூவளகரம்வாழி
மன்னவர்வாழியிந்தமாநிலமுழுதும்வாழி
யின்னல்மானநூலையினிதுறப்பகர்வோர்கேட்போர்
நன்னலமிகுந்தேயெந்நாளினும்வாழ்கமாதோ. ௰௭

வாலசுந்தரர்புண்ணியபரிபாலனப்படல-முற்றிற்று.

ஆ படலம் ௨௰ - க்கு திருவிருத்தம் - ௲௩.

ஸ்ரீ ம த் - கூ வ ல ப் பு ர ம்

அன்னதானமகத்துவபுராண முற்றிற்று.

சுந்தரமூர்த்திசுவாமிகளது

திருவடிகள் வாழ்க.

---